குலசேகர ஆழ்வாரின்

# திருமால் பக்தி

This book is published with the financial assistance of Tirumala Tirupati Devastahnams under their schme "Aid to publish Religious Books"

முனைவர் பி. குருசந்தர், M.A., M.Phil., Ph.D.,
தமிழ் விரிவுரையாளர்
சேலம் சௌடேஸ்வரி கல்லூரி,
சேலம்

தாரணி பாரதி பதிப்பகம்
8/78, சாமி தெரு, ராம் நகர் பிரிவு அருகில்,
அயோத்தியாப்பட்டணம், சேலம் - 636 103. தமிழ்நாடு

# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | குலசேகர ஆழ்வாரின் திருமால் பக்தி |
| நூல் ஆசிரியர் | : | முனைவர் பி. குருசந்தர்<br>8/78, சாமித்தெரு, ராம்நகர் பிரிவு அருகில்,<br>அயோத்தியாப்பட்டணம், சேலம் – 636 103. |
| அலைபேசி | : | 94430 82448 / 99651 02100 |
| பதிப்பு | : | முதற் பதிப்பு 2007 |
| பதிப்புரிமை | : | © ஆசிரியருக்கு |
| தாள் | : | 14.2 கி வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு | : | 1 x 8 |
| அச்சு எழுத்து | : | 10.5 புள்ளி |
| பக்கங்கள் | : | 112 |
| படிகள் | : | 1000 |
| வடிவமைப்பு | : | அடல் வரைகலை, சேலம். 98427 31613 |
| அச்சிட்டவர் | : | குறிஞ்சி ஆப்செட், தலைவாசல். |
| விலை | : | ரூ.50/– |

# அணிந்துரை

**கோ மாரியப்பன்,**

தமிழ்ப்பேராசிரியர்,

மனோ கல்லூரி, நெல்லை

நம் நாடு எல்லா வளமும், எல்லா நலமும் கொண்டது. இயற்கை வளமும் இறை நெறியும் செம்மையாக அமைந்துள்ளது. அதில் திருமால் வழிபாடு ஆதிகாலம் தொட்டே இருந்து வருகின்றது என்பதைத் தொல்காப்பியம் சான்று பகிர்கின்றது. திருமால் மீது ஆழங்கால் பக்தி கொண்டோர் பலகோடி. அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் பன்னிருவர். அவர்களை ஆழ்வார்கள் என்பர்.

அந்தப் பன்னிருவருள் குலசேகரர் தனித்தன்மை உடையவர். நாடாண்ட மன்னர். திருமால் மீது பக்தி கொண்டு துறவு மேற்கொண்டவர். திருமலையில் ஏதாவது ஓர் அஃறிணையாகப் பிறக்கவும், கிடக்கவும் விரும்பியவர். அத்தகைய குலசேகரர் வாழ்வியலையும், திருமால் மீது அவர் கொண்டிருந்த பக்தியையும் திருமால் பற்றிப் பாடிய பாடல்களையும் ஒருங்கு சேர அணுகி ஆய்வு நோக்கில் நுட்பமாக அணுகி செய்திகளைச் செறிவாக வெளிப்படுத்தி உள்ளார், சேலம் சௌடேஸ்வரி கல்லூரி தமிழப் பேராசிரியர் முனைவர் பி.குருசந்தர் அவர்கள். வைணவ மரபில் தோன்றியவர் பாலப்பருவத்தில் இருந்தே திருமால் மீது பக்தி கொண்வர். அவர் குலசேகராழ்வார் திருமால் மீது பக்தியை வெளிப்படுத்தி இருப்பது பாம்பின்கால் பாம்பறியும் என்பதற்கேற்ப அமைந்துள்ளது.

குருசந்தர் அவர்கள் குலசேகராழ்வாரின் திருமால் பக்தியைப் பற்றி எழுதியிருப்பது சாலப் பொருத்தமாகும்.

குலசேராழ்வார் படியுள்ள ஸ்ரீ பெருமாள் திருமொழி பாடல்களுக்கு எளிய இனிய விளக்கம் அளித்துள்ளது. அவரது இலக்கியப் புலமையை வெளிப்படுத்துகிறது.

யாவரும் எளிதில் படித்து கருத்துக்களை உள்வாங்கிக்கொள்ளும் இனிய சொற்களைக் கொண்டு எளிய நடையில் இயற்றி உள்ளார். அவரது முயற்சி பாராட்டுக்குரியது. அனைவரும் இந்நூலைப் படித்து பயன்பெற வேண்டுகிறேன்.

இவண்

பேராசியர் **கோ. மாரியப்பன்.**

# நன்றியுரை

இந்நூல் வெளிவருதற்கு உதவி கரம் நீட்டி நிதி உதவி வழங்கிய திருமலை–திருப்பதி, தேவஸ்தானம் பதிப்பாசிரியர் உள்ளிட்ட நிர்வாகக் குழுவினருக்கு உளங்கனிந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூல் முழுவடிவம் பெறவும், என்னை தொடர்ந்து எழுதத் தூண்டிக் கொண்டிருக்கும் நண்பர் சந்தியூர் கோவிந்தன் அவர்களுக்கு எனது ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

சேலம் சௌடேஸ்வரி கல்லூரி தாளாளர் மற்றும் செயலாளர், சேவாரத்னா J.K.K அங்கப்ப செட்டியார் அவர்களுக்கும், கல்லூரி முதல்வர் முனைவர். V.சிங்காரம் அவர்களுக்கும் சுயநிதிப் பிரிவு பொறுப்பு திரு. P. சுரேஷ் அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியது.

பக்தி குறித்து பல நுட்பமான தகவல்களை வழங்கிய திரு. சீனிவாசன் அவர்களுக்கும் யான் பெரிதும் கடப்பாடுடையேன்.

என்னை பல்லாற்றானும் ஆற்றுப்படுத்திவரும் ரோஜா இதழ் அதிபர் துரை. ராமச்சந்திரன் அவர்களுக்கு உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

சென்னைப் பல்கலைக்கழக மொழித்துறைத் தலைவர் பேராசிரியர் வ.ஜெயதேவன் அவர்கள் எனக்களித்த ஊக்கம் அளவிடற்கரியது. அவர் எனக்குப் பேராசிரியராக கிடைத்தது யான் பெற்ற பெரும் பேறாகும்.

அழகிய அணிந்துரை நல்கிய பேராசிரியர் கோ. மாரியப்பன் அவர்களுக்கும், செம்மையாக மெய்ப்புத் திருத்திய திரு. சிவக்குமார், ஜெயராம் கலை அறிவியல் கல்லூரி அவர்களுக்கும், என்னுடைய வளர்ச்சியில் பெரும்பங்கு கொண்ட கோ.பிலவேந்திரன், முனைவர். கு.மணி, சேலம் அன்பரசு ஆகியோருக்கு நன்றி!

என்னை வளர்த்து ஆளாக்கிய அன்பு பாட்டி பட்டத்தாள், என்றும் என்னை ஊக்கப்படுத்தும் மனைவி குரு ரத்னா, மகள் குரு தாரணி, மகன் குரு மணிபாரதி, செல்வி கோகிலா ஆகியோருக்கு என் சிறப்பான நன்றி.

குறித்த நேரத்தில் செம்மையாக நூலாக்கம் செய்து வழங்கிய அச்சகதாருக்கு நன்றி!

நாள் : 20–6–2007
இடம் : சேலம்.

அன்புடன்,

முனைவர் பி. குருசந்தர்
பேசி : 9965102100

# பொருளடக்கம்

# 1. வைணவத்தில் குலசேகரர்

வைணவ சமயம் இந்நாட்டின் பழம் பெரும் சமயமாகும். வைணவக்கடவுளான திருமால் வழிபாடு ஆதிகாலத்திலிருந்தே இருந்து வந்துளள்தைத் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளதன் வழி உணரலாம்.

'வைணவத்தில் குலசேகரரின்' பக்தியின் வளர்ச்சி, வைணவத்தில் திருமாலை முதலாகப் போற்றும் பாங்கு, ஆழ்வார்களின் சிறப்பு, அவர்களில் குலசேகரரின் வாழ்க்கை, போன்றவற்றைத் தொகுத்து ஆராயப்பட்டுள்ளன. குலசேகரர் இறைவனுக்குக் கப்பம் கட்டுதல், துறவறம், அவரது ஆட்சி சிறப்பும், மாட்சிமையும் இராமாயணத்தில் ஈடுபாடும் காண்போம்.

மக்களினம் தோன்றி அறிவு வளர்ச்சியில் முற்படும் காலத்திலிருந்து பக்தி நிலைகளை அறிகின்றனர். மனித இனம் அனைத்து உயிர்களைவிட வேறுபட்டு உயர்ந்தவை. மனிதர்கள் பகுத்தறிவைப் புகட்டும் பண்பாளர்கள் ஆவர். அவர்களில் சிலர் ஞானத்தைப் பெறவும், தமக்கும் மேலான பரம்பொருளைக் காணவும் முற்பட்டனர். அவர்களில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் தமிழகத்தில் பக்தி பாசுரங்களைப் படைத்து மக்களை மேம்பட செய்தவர்கள். வேற்று நாட்டவர்களால் ஆட்சி செய்த நம் நாட்டைப் பக்தி பனுவல்களால் மீட்டு மறுமலர்ச்சிக் கண்டுள்ளனர்.

## பக்தி இயக்கம்

தமிழ்ப் பக்திப் பனுவல்களான பன்னினுரு திருமுறைகள். திவ்விய பிரபந்தங்கள் ஆகியன அன்பின் பிழிவாக அமைந்துள்ளன. அவரவர் செய்த வினைப்பயன்களை நுகர்ந்தே கழிக்க வேண்டும் என்ற சமண சமயக் கொள்கைகளுக்கு மாறாக சைவ, வைணவ சமயங்கள் வினை, வினைப்பயன் ஆகியவற்றிற்கு மேலானவனாக இறைவனைச் சார்ந்தால் அவ்வினைகளைக் கெடு என்று கூறி மக்களைத் தம்பால ஈர்த்தன, பக்தி இயக்கம் மக்கள் இயக்கமாக மாறியதற்கு இதுவே முதன்மையான காரணம் என்பார். க. கைலாசபதி. இறைக் கொள்கைகளை எளியர்களும் புரிந்து கொள்ளுமாறு விளக்கும் இனிய தமிழில் எளிய சொற்களில் இசைத்தமிழில் எடுத்து விளக்கியது மற்றொரு காரணம் எனலாம் என்பது அழகிய நம்பியின் கருத்தாகும். இவ்வாறு பக்தி இயக்கம் மக்களியக்கமாக மாறியது.

## ஆழ்வார்கள்

வைணவத்தை வாழ்விக்க வாழ்ந்த சான்றோர்களை ஆழ்வார்கள் என்றும் ஆச்சாரியர்கள் என்றும் கூறுவர். இறைவனைாகிய திருமாலின குணங்களில் ஈடுபட்டு ஆழ்ந்தவர்களை ஆழ்வார்கள் என்றழைத்தனர். வைணவ, அடியார்களான ஆழ்வார்களை மால் உகந்த ஆசிரியர் என்றும் அவர்தம் பக்திப் பனுவல்களைச் செய்ய தமிழ் மாலைகள் என்று அழைப்பர்.

ஆழ்வார்களில் முதல் ஆழ்வார் மூவர் தவிர, மற்றவர்கள் ஏழு எட்டு ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள். அவர்கள் பன்னிருவரும் திருமாலை வழிபட்டுப் பாடிய நூல்கள் இருபத்து நான்கு பக்திப பாடல்கள் நாலாயிரம் உள்ளன. அவை நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் என்றழைக்கப்படுகின்றது.

அவர்களுள் பன்னிரு ஆழ்வார்களும் திருமாலை முழு முதற்கடவுளாகக் கொண்டு தன் உணர்வுகளை எல்லாம் அவனுக்கே அர்ப்பணித்தனர். அவர்கள் எம்பெருமானின் அருளினால் அக இருள் நீங்கப் பெற்று எல்லாப் பொருள்களையும் ஆழ்ந்து அறியும் தன்மைப் பெற்றனர். ஆழ்ந்த அறிவும் பேறு பெற்றதால் ஆழ்வார்கள் என்பர். ஆழ்வார்கள் என்றச் சொல்லுக்குப் பூர்வாசிரியர்கள், எம்பெருமானுடைய மங்கல குணங்களில் ஆழங்காற்படுபவர்கள் எனலாம். எம்பெருமானின் குணங்களில் ஆழங்காணும் அறிவு வேதத்தாலும் அளவிட முடியாத இறைவனின் அருளைப் பெற்றனர். அத்தகைய அறிவாலும், குணத்தாலும், வேதத்தாலும் மேன்பட்ட பெரியார்களைப் பேறறிவினையுடையார் என்ற பொருளில் பெருமை மிகுதியாய் நின்று, அறிவு தொகுத்துப் பெருமை அறிவுடையார் மேலதாக, ஆர்விகுதி கூட்டிப் பெரியார் என்று கூறப்பட்டது. அப்பெரியார்களை ஆழ்வார்களை ஆழ்ந்த அறிவினையுடையார் என்னும் பொருளில் ஆழ்பகுதியாக வைத்து, அறிவைத் தொகுத்து பொருளினது ஆழ்ச்சி அறிவின் வாயிலாய் அறிவுடையார் மேலதாக ஆழ்விகுதி கூடி ஆழ்வார் எனப்பட்டது.

### நாலாயிர திவ்விய பிரபந்தம்

அவர்கள் நுண்மாண் நுழைபுலம் மிக்கவர்களாகப் பல்லவர்கள் காலத்தில் பக்தி நெறிகளை வளர்த்தனர். வேதமாகிய கடலில் மூழ்கி முத்து எடுத்து அதன் பயன்பாட்டையும் மக்களுக்கு உணர்த்தியவர்கள் ஆவர். தெரிய இயலாத வேதக் கடலுள் ஆழ்ந்து கிடக்கின்ற மந்திரங்களைத் தங்கள் திவ்விய ஞானத்தினால் மூழ்கி எடுத்து உலகிற்கு உபகரிக்குமவர்களை ஆழ்வார்கள் எனக் கூறியது பொருந்தும் எனலாம். அவர்களின் படைப்புகளைப் பகுத்தும் தொகுத்தும் நாலாயிர திவ்விய பிரபந்தங்களை நாத முனிகள் தொகுத்துள்ளார். பாமர மக்களும் உண்மை பொருளாகிய ஞானத்தைப் பெறும் வண்ணம் எளிய நடையில் உரை செய்வர் பெரியவச்சான் பிள்ளை ஆவார்.

### குலசேகரர்

நாதமுனிகள் தொகுத்த ஆழ்வார்கள் வரிசைகளில் ஐந்தாவதாக, குலசேகராழ்வார் உள்ளார். அவர் படைத்த பெருமாள் திருமொழி மக்களை மகிழ்வுறச் செய்கிறது. சேர நாட்டை ஆட்சி செய்த மன்னன் நிலையான வாழ்க்கையைத் தேடி பார்த்ததில் திருமாலாகிய பரம்பொருளையே கண்டு தெளிந்துள்ளார். உலக மக்களின் ஆசைகள் காரணமாகத் தோன்றும் பொருள்களையும், அம்மக்களையும் வெறுத்து, ஞானத்தைப் பெற்றுள்ளார். இராமன் காட்டுக்குச் சென்றபோது, அயோத்தி மக்களும் செல்லத் துணிந்தனர். அம்மக்கள் இராமன் இருக்கும் காடே நாடாகும் என்ற உண்மையை அறிந்துள்ளனர். அத்தகைய இராமனின் மாண்பினைக் காண குழசேகரர் தன்

சேர நாட்டைத் துறந்து துறவு பூண்டார். அவர் வடமொழியில் அமைந்து 'முகுந்த மாலையை' தம் நாட்டு மக்களுக்கேற்ப பெருமாள் திருமொழியாகப் படைத்துள்ளார். அதில் பெரும்பாலும், கிருஷ்ண, இராம அவதாரங்களைப் பற்றியே மிகுதியாகப் பாடப்பட்டுள்ளது. நாட்டு மக்களுக்கு இராமனைப் போன்று ஆன்மீகவாதத்தை வளர்த்துள்ளார் எனலாம்.

பல்லவர் காலத்தில் பக்தி பாசுரங்கள் பரந்து விரிந்தன. தமிழ்நாட்டின் மறுமலர்ச்சியாகச் சைவ நாயன்மார்களும், வைணவ ஆழ்வார்களும் படைத்துக் காட்டினர். இப்பக்தி இயக்கத்தின் விளைவாகவே வழிபாட்டு முறைகளும், தமிழ் பண்ணிசையால் பரவின. தமிழ்நாட்டில் சமணமும், பௌத்தமும், ஆட்சி செலுத்தியப் பின், சைவமும் வைணவமும் தழைத்தோங்கின. அக்காலத்தில் மக்களினம் ஏற்றத்தாழ்வின்றி வாழவும், சாதிகளை அகற்றவும், அகங்காரங்களற்று அன்பு செலுத்தவும் பக்தி இலக்கியங்கள் துணைபுரிந்தன.

சைவசமயத்தில் சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு அறுபத்து மூவர் பாடியதை நம்பியாண்டார் நம்பி திருமுறைகளாகப் படைத்துக் காட்டியுள்ளார். பன்னிருவர் பாடிய பாசுரங்களை நாதமுனிகள் சேகரித்துத் தொகுத்துள்ளார். இக்காலத்தில் அத்தொகுப்புக்கு 'நாலாயிர திவ்விய பிரபந்தம்' என வழங்கியுள்ளன. அதில் திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டு பக்தி கலந்த தமிழ் மாலைகளைப் படைத்துள்ளனர்.

# 2. முதற்கடவுள் திருமால்

மக்களினம் தோன்றி நாகரீகம் பெறும் காலத்தில் தன்னைவிட, அதிக சக்தியுள்ள உணர்வை அறிந்தனர். அவைகளையே பிற்காலங்களில் அவரவர்கள் கண்ட பொருளையை வழிபாட்டுக்கு மேற்கொண்டார் எனலாம். விஷ்ணுவைப் பரம்பொருளாகக் கொண்டு வழிபட்டதற்குப் பல்வேறு சான்றுகள் அமைகின்றன. பாஞ்சால மன்னன் விஷ்ணுமித்திரன் நாணயங்களில் இடது மேல் கையில் சக்கரம் கொண்ட விஷ்ணுவின் வடிவம் பொறிக்கப்பட்டுள்ளது. பின்பு, கி.மு. பத்தாம் நூற்றாண்டில் பாரதப் போர் தோன்றிய என்பர். அக்கால கட்டத்தில் 'வாசுதேவ கிருஷ்ணர்' வாழ்ந்தவர் ஆவார்.

நாராயணர் விஷ்ணு மூர்த்தியாகக் கருதப்பட்ட குறிப்பு போதாயன தர்ம சாஸ்திரத்தில் கிடைக்கின்றது. எனவே ஸ்ரீ கிருஷ்ணரை முக்கியமான கடவுளாக மக்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டனர். ஸ்ரீ யாகிய மகாலட்சுமி விஷ்ஹ மூர்த்தியின் மனைவியாகக் குறிப்பிடப்பட்டுள்ளாள். என்று குப்தர் காலத்தில் அழைக்கின்றனர். அவளுடைய ஆலயத்தைப் பற்றிக் கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம் கூறுகிறது. வேத கடவுளான இலட்சுமி செல்வத்துக்கு அதி தேவதையாவாள். அவள் அனைவருக்கும் ஐசுவரியம் வழங்குபவர். எனவே இப்பெண் தெய்வமாகிய இலட்சுமி வாசுதேவரின் மனைவி ஆவாள் என்று சாரநாத் கல்வெட்டு கூறுகிறது. சரபபுர மன்னர்களின் செப்பேடுகளில் வைஸ்ணவி என்கின்ற 'பூ' (உலகம்) விஷ்ணுவின் இரண்டாவது மனைவி என்கிறது. மேலும், சாதவாகனர்களுக்குப் பின்னால் வந்த அரசர்களுடைய கல்வெட்டு ஜனார்த்தனர் என்றக் கடவுளைப் பற்றி, அவர் நான்கு கரங்கள் உடையவர்; நான்கு சமுத்திரங்கள் அவருக்குப் படுக்கையாக உள்ளன. ஆக்கல், அழித்தல், காத்தல் ஆகிய முத்தொழிலும் ஆற்றுபவர் அவர் ஒருவரே. அவருடைய கொடி கருடன் என்று கூறுகிறது.

### முல்லை நில தெய்வம்

கி.பி. 423–ல் காந்தாரக் கல்வெட்டு, "புண்ணியசனர் என்ற அசுரர்களை நாராயணமூர்த்தி ஒடுக்கினார். மூன்று உலகங்களையும் பன்றி உருக்கொண்டு கோட்டினால் தூண்போல் நின்று தாங்கினார். பஞ்சாயுதங்களை அவர் ஏந்தியவர்; மாரிக்காலத்தில் அவர் துயில் புரிவார்" என்று கூறுவதால் திருமாலின் தோற்றத்தையும் அவதாரங்களையும் அறியலாம். எனவே புலன்களால் அறியபடாத இறைவன் வாதங்களுக்கு அப்பாற்பட்டவன். உண்மையான அன்பு செலுத்துபவனுக்கு அன்பினால் அறியப்படுவன் ஆவான். தன்னை விரும்புபவரை விரும்புபவன் ஆகிறான். 'எல்லா உபாயங்களையும் கைவிட்டு என்னையே சரணாக அடைபவனை நான் பாவத்தீயனின்றும் காப்பாற்றி விடுதலை அளிப்பேன்' என்று பகவத் கீதையில் கண்ணன் கூறுவதை அறியலாம். எனவே ஞானத்தைவிட பக்தியும், பிரபத்தியும் சிறந்தவை என்பதை அறியலாம். தமிழ்நாட்டில் விஷ்ணுமூர்த்தியின் வழிபாடு மிகப்பழமையானது. விஷ்ணுவைத் திருமால் என்ற பெயரால் வழங்கினர் தமிழர். 'மால்' என்றச் சொல்லுக்கு மயக்கம் என்றுப் பொருள்படும். அத்தகைய திருமாலைத் தமிழில் தோன்றிய முதல்

இலக்கணமான தொல்காப்பியத்தில்,

"மாயோன் மேய காடுரை உலகம்" என்று முல்லைத் திணைக்குரிய தெய்வத்தை முதலில் வைத்துள்ளதை அறியலாம். மாயவனாகிய கண்ணனை முல்லை நில மக்களாகிய ஆயர்கள் வழிபட்டு வந்தனர். எனவே இவ்வழிபாட்டு முறை தொல்காப்பியர் காலத்துக்கு முந்தியது என்பதை அறியலாம்.

நானில தெய்வமாகக் கூறிய தொல்காப்பியர் முல்லை கடவுளை முதலில் கூறியுள்ள சிறப்பை இதனால் அறியலாம். திருமாலை வழிபடுவோரைப் பற்றியும் தொல்காப்பியர் கூறியுள்ளார்.

"நூலே கரகம் முக்கோல் மனையே
ஆயுங்காலை அந்தணர்க்குரிய"

முந்நூலும், குண்டிகையும், முக்கோலும் ஆனமனையும் போல்வன அந்தணர்குரிய என்பதாகும். வைணவ சமயத்தின் துறவிகள் முக்கோல் தரித்துள்ளனர். மற்றைய சமயத்துறவிகள் ஒரு கோல் கொள்கின்றனர் என்பதையும் இதனால் அறியலாம். அவ்வாறு இறைவனையே நினைந்து வழிபடுபவரை,

"எரித்தரு தாங்கி யேந்திய குடை நீழல்
உரித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇவே றாரா நெஞ்சத்துக்
குறிப்பேல் செயல்மாலைக் கொளை நடை அந்தணீர்
வெவ்விடைச் செலன்மாலை ஒழுக்கத்தீர்"

என்று அந்தணர் கரகமும், முக்கோலும் உடையவர்களாய் சீடர்களுடன் யாத்திரை செய்பவர்களென்றும், இறைவனையின்றி, வேறு இன்பங்களைக் கருதாதவர் என்றும் கூறியுள்ளதில் பக்தியின் நிலைகளை அறியலாம்.

வைணத்தில் ஞான சிகரம் என்று போற்றும் நம்மாழ்வாரும், அடியாரும் பகவரும் மிக்கதுலகே என்று கூறுவார். இவ்வாறு பக்தியின் சிறப்புகளில் வைணவ கடவுளான திருமாலைப் பற்றி புராணங்களும், கல்வெட்டு செப்பேடுகளும், தொல்காப்பியம், சங்க இலக்கியம், நீதி இலக்கியம், காப்பியங்கள் போன்றவற்றில் வழிபாட்டு முறை சிறந்துள்ளமையை இதன்மூலம் அறியலாம்.

# 3. ஆழ்வார்களின் சிறப்பு

ஆழ்வார்கள் தோன்றுவதற்கு முன்பே திருமால் வழிபாடு நாட்டில் இருந்தது. அதனைத் தனிக்களமாகக் கொண்டு வளர்ச்சிப் பெற செய்தவர்கள் ஆழ்வார்களே எனலாம். வைணவர்களில் பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்ற மூவரையும் முதலாழ்வார்கள் என்பர். பிறகு வரும் ஆழ்வார்களைக் காட்டிலும் முதலில் தோன்றி இறைவன்பால் மாறாதக் காதல் கொண்டு நற்றமிழ் நூல்களை அந்தாதிகளாகப் படைத்துள்ளனர்.

"வையம் தகளியா வார்க்கடலே நெய்யாக
வெய்யக் கதிரோன் விளக்காகச் செய்ய
சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொல்மாலை
இடராழி நீங்குகவே என்று"

என்று கூறுவதால், திருமாலின் மீது பக்திக் கொண்டு தன் துயரை நீக்கவே சொற்களாலாகிய மாலையைச் சூட்டுகிறேன் என்று கூறும் பாங்கை அறியலாம். இறைவனோடு தமிழையும் போற்றியவர் என்பதையும் இதன்மூலம் அறியலாம். இத்தகைய சிறப்புக் கொண்ட பொய்கையாழ்வாரை, ஞான தீபத்தைத் தமக்கு வழிகாட்டியாகக் கொண்டார் என்பர் இராமானுஜர். மேலும் இவரை வைணவ சமயத்தின் 'விடிவெள்ளி' என்றும் முதலில் தோன்றிய ஆழ்வாரைப் புகழ்ந்துள்ளார். வேள்விகளையும், சடங்குகளையும் விட பக்தி மிகவும் அவசியமானது என்கிறார்.

**திருவள்ளுவர்,**

"பிறவிப் பெருங்கடல் நீந்துவார் நீந்தார்
இறைவனடி சேரா தார்"

என்று கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் கூறியுள்ளதால், இறைவன் கழல் பற்றி இன்னல் தீரக் கோருவதை அறியலாம்.

"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா என்புருகி
ஞான சுடர்விளக்கு ஏற்றினேன் நாரணர்க்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்"

என்கிறார் ஆழ்வார்.

அன்பு என்ற தகளியைக் கொண்டு ஆர்வமாகிய நெய்யை ஊற்றி, மனமுவந்து சுடர்விளக்கு ஏற்றினால் நாரணர் அருள் புரிவார் என்று தன் ஞானத்தமிழால் கலந்து பாடுவதை அறியலாம். அத்தகைய திருமாலின் பாதங்களைப் பற்றினால் துன்பம் எல்லாம் நீக்கி மக்களிடம் இன்பத்தைக் காண விரும்பினார். அதனை,

"இன்றே கழல் கண்டேன்

ஏழ்பிறப்பும் யானறுத்தேன்"

என்று கூறுவதை இதனால் அறியலாம். இம்மூவர் வாழ்ந்த காலம் சமயப் பூசலற்றது. பிற மதங்களைப் பற்றியோ, சாதி வேறுபாடுகளைப் பற்றியோ கூறாது பொதுவுடமைக் கருத்துகளைப் பக்தியோடு தமிழில் கலந்து பாடிய சிறப்பை அறியலாம். மூவாழ்வார்கள் வாழ்ந்த காலகட்டத்தில் சமணமும் பௌத்தமும் தழைத்தன. ஆனால் அவைகளைப் பற்றிய போட்டியோ, சண்டையே வந்ததாகக் கூறவில்லை.என்பதன் சமய வேற்றுமை இல்லை எனலாம்.

திருமழிசை ஆழ்வார் பேயாழ்வாரை குருவாகக் கொண்டார் என்பர். இவரிடம் முதலாழ்வார்களிடம் காணப்படும் சமரச மார்க்கத்தைக் காண முடியாது. இவரது காலம் தமிழகத்தில் சமயப்பூசல்கள் நிறைந்ததாகும். சமணர்கள், பௌத்தர்கள், சைவர்கள் போன்றோர் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக் கொண்டனர். அதனை,

"அறியார் சமணர் அயர்த்தார் பௌத்தர்
சிறியார் சிவப்பட்டார்"

என்று பிற சமயங்களைத் தாழ்த்தி கூறியுள்ளதை இதன்மூலம் அறியலாம். சைவர்களுக்கு எதிராக மகாலட்சுமியுடன் கூடிய தேவனே சிறந்த தெய்வம் என்று கூறியுள்ளார்.

சமய எழுச்சிக்கு எதிராக, கி.பி. எட்டாம் நூற்றாண்டில் ஆழ்வார்கள் தோன்றி வைணவத்திற்கு ஆக்கம் தேடினர். சாதியையும், ஒழுக்கங்களையும் துணையாகக் கொண்ட காலம் ஏழாம் நூற்றாண்டு. எட்டாம் நூற்றாண்டில் பாகவதர்களைச் சாதி பாராமல் தனக்குச் சமமாக வழிபட வேண்டுமென்று அரங்கநாதன் கூறியதாகக் கூறுவர். அதனை,

"இழிகுலத்தவர்களேனும் எம்மடியார்களாகில்
தொழுமின் நீர் கொடுமின் கொண்மின்"

என்று சாதி அந்தணர்களை நோக்கி அரங்கநாதன் கூறினார். எனவே சாதி சமய வேறுபாடுகள் நீர் மேல் எழுதிய எழுத்து என்ற உண்மையை வெளிப் படுத்துகிறார்.

தாழ்ந்த குலத்தவரான திருப்பாணாழ்வார் அந்தணச் சீலர் தோள்மேல் சுமந்து அரங்கநாதன் சந்நிதிக்குள் அழைத்துச் சென்றது குலத்தைவிடப் பக்தி சிறந்தது என்பதைக் காட்டுகிறது. அத்தகைய இறைவனை விமலன், அமலன், நிமலன், நின்மலன் என்று திருப்பாணாழ்வார் கூறுகிறார். எனவே தீண்டாமை என்னும் தீயப் பழக்கத்தை நீக்கி, தீண்டாதாரையும் தீண்டித் தூய்மை செய்கிறான் இறைவன் என்பதை அறியலாம்.

"நாத்தழும்பெழ நாரணா என்று
அழைத்து மெய்த் தழும்பத் தொழுது
ஏத்தி இன்புறும் தொண்டர் சேவடி
ஏத்தி வாழ்த்தும் என் நெஞ்சமே"

என்று இறைவன் சந்நிதியில் வாழும் சோம்பராய்ப் பணிபுரிந்தும், பக்தி புரிந்தும் பொழுது போக்கும் தொண்டர்களின் அடிப்பொடியே கங்கை நீரைக் காட்டிலும் சிறந்தது என்கிறார் குலசேகராழ்வார். தொண்டர்களுக்கு எப்பிறப்பிலும் அன்பு செய்யும் என் உள்ளம் என்று கூறுவதால் பகவத் கீதையைவிட பாகவதர் கூறும் பக்தியையே உயர்வாகக் கருதினார் என்பதை இதன்மூலம் அறியலாம். பாகவதராகிய வைணவர்கள் நேர்மையானவர்கள் என்று பாம்பு உள்ள குடத்தில் கைவிட்டவர் ஆவார். எனவே குலசேகராழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார் போன்றோர் பாகவதர்களில் சாதி வேறுபாடு இல்லை என்பதை உறுதிபடுத்தி எல்லோருக்கும் உரிய சமயம் வைணவம் என்பதை உறுதிபடுத்தினர் என்பதை அறியலாம்.

அதை,

"சிலையினாய் இலங்கி செற்ற தேவனே தேவனாவான்" தமிழ்நாட்டில் சுற்றித்திரிந்து பரவசமுற்றவர் என்பார்கள். திருமங்கை ஆழ்வாரை,

"தேசமறிய உமக்கே ஆளாய்த்

திரிகின்றோம் உமக்கு"

தொண்டர்களுக்கு அடிமைப்பட்டு கூறுவதை,
"உற்றது உன்னடியார்க் கடிமை
மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்தும்
கற்றுநான் கண்ணபுரத்துறையம்மானே"

என்று கூறுவதால் அவரின் பக்தியின் மிகுதிப்பாட்டை அறியலாம்.

கண்ணனைச் சிறு பிள்ளையாகப் பாவித்துப் பிள்ளைத்தமிழ் பாடியவர் பெரியாழ்வார் ஆவார். தன் வளர்ப்பு மகளை அவ்வரங்கனுக்கே மனைவியாக்கிய பெருமை அவரது பக்தி பாசுரங்களில் அறியலாம். கண்ணனைத் தொட்டிலிட்டு ஆணிப் பொன்னால் செய்த வண்ணச் சிறு தொட்டில் கட்டித் தாலாட்டுகிறார்.

"ஐயா அழேல் அழேல், தாலேலோ" என்று பாடுகிறார். கண்ணன் குழலோசையால் அகிலமெங்கும் உள்ள உயிர்களின் உள்ளங்களில் கூத்தாடச் செய்கிறது. ஆண்டாளின் நோன்பு தன்னை ஆயர்குலப் பெண்ணாக நினைத்துக் கொண்டு காலத்தை வென்றவர்.

பின்பு ஆழ்வார்களில் நம்மாழ்வாரை ஆன்மா என்பர். திருத்துழாய் போல் பிறக்கும் போதே பரிமளத்தோடு தோன்றினார். எனவே இவர் இயற்கையிலே ஞானத்தைப் பெற்றவர் என்பதை இதன்மூலம் அறியலாம். இறைவனை நம்முடைய முயற்சியால் கண்டுகொள்ளார் என்பது அறியாமையென அறிந்தவர். இறைவன் நம்மைத் தீண்டிக் கைக்கொள்ளக் காத்துக் கிடக்கிறான். அவன் அருள் கொண்டு அவன் தாளை அடைவது நமக்கு எளிதாகும் என்பதை,

"காட்டித் தன் கனை கழல்கள்
கடுநரகம் புகல் ஒழித்தவன்"

இறைவன் என்கிறார்.

கடலுக்கு இணையான இவரது அனுபவங்களைப் பாட்டாக வெளிப்படுத்த எண்ணிய பகவான் தாமே அவர்வாய் மூலராகத் திருவாய் மொழியை வெளியிட்டார் என்பார்கள். எனவே இத்தகைய சிறப்பு கொண்ட ஆழ்வாரின் படைப்பைத் 'திராவிட வேதம்' என்று அழைத்துள்ளனர். மேலும்,

"நான் உன்னை அன்றியிலேன்
கண்டாய் நாரணனே! நீ
என்னை அன்றி இலை"

என்பதன் வாயிலாக, நம்மாழ்வாரின் சீடனாக இருந்து, நாரணனைக் காட்டிலும் கடவுளாகத் தன் குருவை நினைத்த பெருமையை அறியலாம். இவர் திருமாலைப் பாடவில்லை. ஆழ்வார்களில் இறைவனைப் பாடாதவர் என்பதையும், நம்மாழ்வார் மீது கொண்ட பக்தி உணர்வே அவரை நன்மார்க்கத்தைக் காட்டியது என்பதையும் அறியலாம்.

# 4. குலசேகரரின் வாழ்க்கை

தமிழகம் மூவேந்தர்கள் ஆளும் முப்பிரிவாக இருந்தன. அவற்றுள் மலைவளம் மிக்க நாடு சேரநாடாகும். அந்நாட்டை திடவிரதன் ஆட்சி புரிந்தபோது, பிள்ளை இன்மை என்ற குறையைத் தீர்க்க குலசேகரன் பிறந்தான். அவனுக்குத் செய்ய வேண்டிய நாம கரணம் முதலான விதிகளைச் செம்மையுறச் செய்தனர். கல்வி கற்கும் பருவம் வந்தது. வேதங்கள், சாத்திரங்கள் முதலானவற்றைப் பயிற்றுவிக்கவும், வில், வாள் போன்ற அரசக் குலக்கலைகளைக் கற்று தரவும் நல்லாசிரியரைத் தேர்ந்தெடுத்தார். குலசேகரன் இளமைப் பருவத்தே அறிவு நுட்பம் கொண்டு பல கலைகளையும் கசடறக் கற்றான். தன் மகனின் கல்வியறிவைக் கண்ட மன்னன் மகனுக்குப் பட்டம் சூட்டி மகிழ்ந்தான்.

குலசேகரன் வலிமை மிக்கவனாக பகை மன்னர்களை வென்று மூவேந்தர்களையும் தன்வசப்படுத்தினான். மகனின் வெற்றி சிறப்பைக் கண்ட அரசன் தான் கானகம் சென்று தவ வாழ்வை மேற்கொண்டார். குலசேகரன் நாட்டு மக்களுக்குப் பிரிதொரு துன்பமும் நேராதவாறு காத்து அருளினான். தன் வாலிப வயதில் பெண்மை குணம் கொண்ட நல்லாளை மணம் செய்து இல்லறம் நடத்தினான். பிறகு குலசேகரனுக்கு ஆண் மகவு பிறந்ததால் பாட்டனார் பெயரையும், பெண் மகவு பிறந்தமைக்கு 'இளை' என்று பெயர் சூட்டி மகிழ்ந்தான். பின்னாளில் நிறை குணம் கொண்ட கடவுள் யாரென தன் உள்ளத்திலே வினவலானான். கற்றறிந்த சமய சான்றோர்களை வரவழைத்து உரையாடினான். அவ்வுரையாடலில் திருமாலே முழுமுதற் கடவுள் என்பதை அறிந்து கொண்டான். பின்பு அரசாளும் குலசேகரன் நாளடைவில் மனதை ஆளும் அரசனானான். மன்னன் என்ற உணர்வற்று பக்தனானான். இராம அவதாரங்களிலும், கிருஷ்ண அவதாரங்களிலும் பெரிதும் ஈடுபாடு கொண்டு, திருவரங்கம், திருவேங்கடம் ஆகிய தலங்களுக்குச் சென்று பெருமானைத் தரிசித்து வந்தார். தன் மாளிகையில் கற்ற வல்ல பாகவதர்களை அழைத்து இராமாயணச் சொற்பொழிவு நடத்தினார்.

## இறைவனுக்கு கப்பம் கட்டுதல்

இராமாயணச் சொற்பொழிவு கேட்டு பரவசமுற்றதோடு, தன் மாளிகையில் இராமனுக்குக் கோயில் கட்டி வழிபட்டார். ஒருமுறை இராமாயணச் சொற்பொழிவில் இராவணன் சீதையை எடுத்துச் சென்றார் என்பதைக் கேட்டு குலசேகரர் தன்சேனாதிபதிகளைப் போருக்குச் சென்று இராமனுக்குத் துணைபுரிய ஆணையிட்டார். அவ்வாறு பக்தி பரவசத்தால் இருப்பதை உணர்ந்த பாகவதர் இராவணனை வென்று, பிராட்டியாரை இராமலட்சுமணன் மீட்டு வந்தார் என்பதைக் கேட்டு தன் படைகளைத் திருப்பினார் என்பர். இராமன் தன் பிராட்டியோடும், இலட்சுமணனோடும் வந்து குலசேகரருக்கு அருள்பாலித்தார் என்றும் கூறுவர். தன் சேனைகளோடு நாடு திரும்பிய குலசேகர் திருமாலைக் கண்டதாகக் கூறி மகிழ்வதை அவரின் ஆழ்ந்த பக்தி நிலை உணர்த்துகிறது.

இராமநவமி விழாவைக் குலசேகரர் கொண்டாடிய போது, இராமனுக்கு

அலங்காரம் செய்த அணிகலன்களில் ஒன்று காணாது போய்விட்டது. அதனை விழாவிற்கு வந்த வைணவர்கள்தான் எடுத்தார்கள் என அமைச்சர் கூற, வைணவ அடியார்கள் இவ்வாறு களவாட மாட்டார்கள் என நம்பி, ஒரு குடத்தில் நல்ல பாம்பை அடைக்கப்பட்டு கொண்டு வருமாறு ஆணையிட்டார். வைணவர்கள் அவ்வணிகலனை எடுத்திருப்பின் இப்பாம்பு என்னைத் தீண்டிக் கொல்லட்டும் என்றார். ஆனால் அப்பாம்பு அவரைத் தீண்டாது ஒதுங்கியது. எனவே அவ்வணிகலனைத் திருடியவர்கள் அமைச்சர்தான் என்பதை அறிந்தார். தன் செல்வத்து மேல் ஆசையின்றி துறவு செல்லவே தானே அணிகலனை மறைத்து வைத்தார் என்றும் கூறுவார்கள். அமைச்சருக்குத் தண்டனையாக வைணவர்களோடு பணிவிடை செய்யவும் உத்தரவிட்டார். பின்னாளில் அரச வாழ்வில் விருப்பமின்றி, வெறுப்புக் கொண்டார்.

## துறவறம்

தன் மகனுக்குத் தந்தை பெயரையே சூட்டி மகிழ்ந்த குலசேகரர் நாட்டுப் பொறுப்பைமகனிடம் ஒப்படைத்துவிட்டு திருவரங்கம் சென்றார். அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நாற்பொருளை உணர்ந்து இறுதி வாழ்வை இறைவனுக்கு அளித்தார். வைணவ அடியார்களுக்கெல்லாம் பணியாகிய அடிமைத் தொழில் செய்து வந்தார். பின்பு திருவேங்கடம், தில்லைதிருச்சித்திர கூடம், திருக்கண்ணபுரம், திருமாலிருஞ்சோலை, திருவித்துவக்கோடு, அயோத்தி போன்ற திருமாலின்தலங்களக்குச் சென்று பெருமாளைப் பாடி பரவசமுற்றார். இறுதியில் நம்மாழ்வார் தலமாகிய திருக்குருகூர் அருகேயுள்ள தலத்தில் தங்கினார். அங்கு அருளியிருக்கும் பெருமானுக்குத் தொண்டு செய்து வருகையில் தன் அறுபத்தேழாம் வயதில் வைகுந்த பதவியை அடைந்தார். அவரது திருமொழிகள் இராமாயண சாரமாகவும், நல்லிசைத் தமிழாகவும் அமைந்துள்ளதை உணர முடிகின்றது.

## ஆட்சியும் மாட்சியும்

பன்னிரு ஆழ்வார்களில் திருமங்கை ஆழ்வாரும், குலசேகரரும் அரசர்களாவர். கொல்லி, கோழி (உறையூர்)கூடல் ஆகிய இடங்களை ஆட்சி புரிந்தனர். மக்களின் வாழ்க்கை முறைகளையும் செல்வ நிலையாமையையும் நன்கு அறிந்து துறக்க முற்பட்டவர்கள். உயிர்களிடத்தில் அன்புகொண்டு, இறைவன்பால் அன்பு செலுத்தினர். மக்களை நல்வழிப்படுத்தவும், மாயையாகிய வாழ்க்கையைத் துறந்து இறைவன்பால் அன்பு மாறாத காதல் கொண்டிருந்தனர். வீடுபேரடைய எல்லா வளங்களும் இருந்தாலும், ஊழ்வினைப் பயனாலும் கருமத்தால் ஏற்படும் பந்த பாசத்தாலும் ஆன்மா பூர்த்தியடைவதில்லை. ஒருவனுடைய ஞானம், பக்தி, கர்மங்கள் ஆகியன அவன் வேண்டும் விடுதலையை அளிக்க முன்வருவதில்லை.

எனவே பகவானுடைய பரமகருணையும், கிருபையும் இன்றித் தன்னால் ஒன்றும் செய்ய இயலாமையை உணர்ந்தவர்கள். தன் ஆதரவற்ற நிலையை நினைத்து, இறைவனையே புகலாக அடைகின்றனர். தன் இயலாமையை உணர்ந்து பற்றுக் கோடின்றிப் பகவானையே தஞ்சமாகக் கருதி விடுதலை

அடைய இறைவனிடமே நம்பிக்கை கொண்டு சரணடைவதே பிரபத்தி என்று வாழ்ந்தனர். இத்தகைய பெருமைப் பெற்ற குலச்சேகரரை,

"தரணி நீத்துத் தவஞ்சார்ந்தான்" என்று சேக்கிழார் புகழ்வதை அறியலாம். மனைவாழ்க்கையும், அரச வாழ்க்கையையும் நன்கு அறிந்த குலசேகரர், தம்மைவிட வலிமை கொண்ட இறைவனாகிய பரம்பொருளை உணர முற்பட்டார். நன்னெறி செய்யாத தீயவர்களைக் கண்டு சேராமல் விலகி வாழ முற்படுகிறார். குற்றமற்ற நல்வழிகளைவிட்டு, தீய காரியங்களைச் செய்பவரோடு சேர விரும்பவில்லை குலசேகரர். அதனை,

"தீதில் நன்னெறி நிற்க, அல்லாது செய்ய
நீதியாரொடும் கூடுவதில்லை; யான்"

என்று கூறுவதால் மக்களிடம் தீய பழக்கமும், வஞ்சக நிலைகளும் நிரம்பியிருந்தன. அத்தகைய கொடியவர்களோடு நட்பு பெறாமல் இருப்பது நல்லது என்பதை அறிந்துள்ளார் என்பதை அறியலாம்.

நாட்டு மக்களிடத்தில் பல்வேறு தீய எண்ணங்கள் நிரம்பியுள்ளன. அவர்கள் உணவுக்கும் உடைக்கும் இருப்பிடத்திற்கும் மட்டுமின்றி ஆசைகளை வளர்த்து உழறுவர். அத்தகைய வாழ்வை விரும்பாத குலசேகரர், இறைவனிடமே அன்பும், பாசமும், விரதமும் நிறைந்துள்ளது. எனவே அவனிடம் சரணடைவது மேலானது என்பதை அறிந்து கூறுகிறார். அதனை,

"உண்டியே உடையே உகந்து ஓடும் இம்
மண்டலத்தோடும் கூடுவது இல்லை யான்;
அண்டவாணன் அரங்கன்வன்பேய்–முலை
உண்ட வாயன்தன் உன்மத்தன் காண்மினே"

என்று கூறுவதால், மனிதனிடம் அன்பு இல்லாமையை உணர்ந்து, இறைவனைப் புகழ்வதை அறியலாம். எனவே அன்னை பிள்ளையிடம் காட்டும் பாசத்தைப் போல், இறைவனின் பாசத்தில் பித்தாகக் குலசேகரர் வாழ்ந்துள்ளதை அறியலாம். நிலையற்ற இவ்வுலக வாழ்வை நம்பி வாழ்வார்களிடத்தும், பெண் இன்பமே துணையாகக் கொண்டு வாழ்பவர்களிடத்தில் அன்பு காட்டவில்லை குலசேகரர். நிலையற்ற வாழ்வைத் துறந்து நிலையான பக்தியைப் பெற விரும்பியுள்ளார்.

"மெய்இல் வாழ்க்கையை மெய் எனக்கொள்ளும் இவ்
வையம் தன்னொடும் கூடுவது இல்லை யான்" என்றும்,

"நூலின் நேர்–இடையார் திறத்தே நிற்கும்
ஞாலம் தன்னொடும் கூடுவது இல்லை யான்;
ஆலியா அழையா, அரங்கா ! என்று
குரல் எழுந்தொழிந்தேன் என் தன் மாதுக்கே"

என்று நிலையற்ற மக்களிடத்தும், நூல் நிகர் மெல்லிடையாளாகிய பெண் இன்பமே பேரின்பமாகக் கருதும் உலகத்தாரிடத்தும் நான் நட்புக் கொள்வதில்லை.

அன்பின் மிகுதியால் ஆடி, அரங்க நாதனே! என்று அழைத்துப் பேரன்பு கொண்ட பெருமாளிடத்தில் அன்பு கொண்டுள்ளதை விருப்புவதை அறியலாம்.

"குணம் நாடி குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்கக் கொளல்"

என்ற வள்ளுவரின் வாக்கிற்கேற்ப, குலசேகரர் வாழ்ந்தமையை இதன்மூலம் ஒப்பிட்டு அறியலாம். மதிநுட்பம் கொண்ட மாந்தர்கள் தனக்கு வரும் கேடுகளையும், நன்மைகளையும் முன்னரே அறிந்து, அதன் வழி தம் வாழ்வை நடத்துவர்–அரசு புரிந்த குலசேகரர் தன் அரசாட்சி மீதும் அமைச்சர்கள் மீது பற்றுக் கொள்ளாத இறைவனாகிய திருமால் இடத்தில் மயக்கம் கொண்டமையை அறியலாம்.

"எம்பெருமான் தன் சரிதை செவியால் கண்ணால்
பருகுவோம் இன்னமுதம் மதியோம் அன்றே"

என்கிறார். இலட்யசித்தைக் கடைபிடித்துள்ளமையை இதனால் அறியலாம். பேரகத்தை நினைத்து பொருளைப் பெற பரம்பொருளை மறக்கும் மக்கள்; பேயர்கள் என்கிறார் குலசேகரர்.

"பேயரே எனக்கு யாவரும் யானும் ஓர்
பேயனே எவர்க்கும்"

என்று கூறும் பாங்கை இதன்மூலம் அறியலாம். பாகவதர்களோடு இறைவன் சொற்பொழிவைக் கேட்டுக் கொண்டு, அரச காரியங்களை மறந்திருக்கும் குலசேகரர் மீது அமைச்சர்கள் வெறுப்புக் காட்டினார். ஆனால் குலசேகரரோ பகவானின் புகழைப்பாடி கண்ணீர் வடிவதைக் கொண்டு, அச்சேற்றைத் தலையில் பூசி மகிழ்வேன் என்கிறார். அதனை,

"ஆறுபோல் வரும் கண்ண நீர் கொண்டு
அரங்கன் கோயில் திருமுற்றம்
சேறுசெய் தொண்டர் சேவடிச்செழுஞ்
சோறென் சென்னிக் கணிவனே"

என்று இறைவன்பால் கொண்ட பத்தியுணர்வைக்காணலாம். இத்தகைய தென்பால் அமையும் திருவரங்கத்தில் பாம்பனையில் படுத்திருக்கும் திருமாலைப் பாட குலசேகர ஆழ்வாரே சிறந்தவராவார் என்கின்றனர்.

அதனை,

"தென்னரங்கன் பாடவல்ல சீர்ப்பெருமாள்
எங்கள் குலசேகரன் என்றே கூறு"

என்று இராமானுஞர் குலசேகராழ்வாரின் திருவரங்கத்துள் பள்ளி கொண்டுள்ள அரங்கன் மீதுள்ள பக்தியைப் ஏத்தி போற்றிப் புகழ்கின்றார்.

# 5. இராமாயணத்தில் ஈடுபாடு

உலக இலக்கியக் காப்பயிங்களுள் இராமாயணமும் ஒப்பற்ற ஒன்றாகும். அதன் நாயகன் மக்களினத்திற்கு ஆத்ம ஞானத்தில் திளைத்திருக்கும் இராம பிரான் முன்மாதிரியாக உள்ளான். அறநெறியை வடிவம் கொண்டு, எல்லா சமயங்களிலும் அறத்தைக் கடைப்பிடிப்பவன். அவனது பழம்பெரும் சரிதம் மக்களிடையே நெடுங்காலமாக கதை வடிவில் வந்துள்ளது. மக்களின் கலாச்சாரங்களுக்கு ஏற்ப பல வடிவங்களிலும் வழக்கில் இருந்தன. வான்மீகி முனிவர் இயற்றிய இராமாயணமே அதிகாவியமாக அறிஞர்கள் கூறுகின்றனர். தமிழர்கள் உலகுக்கு வழங்கிய நன்கொடையான இராமகாதையைப் பிற இலக்கியங்களுக்குள் ஒப்பிட்டு கூறுகின்றனர். கம்பன் தன் நாட்டின் சூழ்நிலைகளுக்கேற்ப, படைத்துள்ளதால் ஆழ்வார்களைப் போன்ற சிறப்பு பெறுகிறான் எனலாம். இராமபிரானது வரலாற்றைச் சங்ககாலத்தில் வைணவம்மாகச் சிறப்பு பெற்று இடைக்காலத்தில் பக்தியாக ஆழ்வார்கள் வளர்த்துள்ளனர். அதனால் ஆழ்வார்களைத் தமிழர்கள் போற்றுவாராயினர். இவரது நூல்கள் வேதத்தைவிட சிறந்ததாக மணவாளமாமுனிவரும், வேதாந்த தேசிகரும் புகழ்வர்.

ஆழ்வார்களில் அரசனாகிய குலசேகரனின் சிறப்பைச் "சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோன் எங்கள் குலசேகரன்" என்று உடையவர் புகழ்வதை அறியலாம். இவர் அரசாட்சி செய்தாலும் உள்ளத்தில் திருவரங்கனையே நினைத்து உருகியவர். இவர், "திருவரங்கப் பெருநகருள் "தெண்ணீர்ப் பொன்னித் திரைக்கையால் அடிவருடப் பள்ளிகொள்ளும் கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டு என் கண்ணினைகள் என்று கொல்லோ களிக்கும் நாளே" என்று பாடுகிறார். இத்தகைய சிறப்புப் பெற்ற குலசேகரரைத் திருநாளைப் போவார் என்று தெ.பொ. மீனாட்சி சுந்தரம் கூறுவதை அறியலாம். இப்பெருமானார் இராமாயணக் கதையைக் காதால் கேட்டும், நாடமாக அமைத்து கண்ணால் கண்டும் மகிழ்வு பெற்றார். அதனை,

"எம்பெருமான் தன் சரிதை செவியால்
கண்ணால் பருகுவோம் இன்னமுதை மதியோம்"

என்று உலகறியக் கூறுவதை அறியலாம். கம்பனைப்போல் காப்பியத்தை இப்பெருமகனார் பேரவையில் இராம கதையை கூறுவார்கள். அதுகேட்ட ஆழ்வார் அந்தந்த இடங்களுக்கேற்ப, உணர்ச்சி பெறுவார் என்று குருபரம்பரைக்கதை கூறுகிறது. இராவணன் பிராட்டியாரைக் கவர்ந்து சென்ற பகுதியைக் கேட்ட குலசேகரர், இராவணனைப் பார்த்துக் கோபபடுகிறார். அதனை,

"சிரங்கள்ளந்து அழலும் பெய்து புரிதவத் திண்மை நாடி
வரங்கள் தந்தவனும் மேரு மலைசிலை வணக்கிமாயாப்
புரங்கடந்தவனும் நின்னைக் காப்பினும் புயம்கொல் சென்னி
கரங்கள் வேறாகக் கொய்வன் யாவர்மேல் காத்தல் செய்வார்

என்னை ஈன்று உலகுயாவும் ஈன்றருள் ராமன் தேவி
தன்னை நீ விரும்பல் சீயத்து உணவை நாய் தனி வேட்டற்றால்!
அன்னையை விடுத்து ஏகாது எவ்வானிடத்து அனந்தாயேனும்
உன்னையான் உயிருன் உல்லால் மீள்கலேன் உயிரும் வேண்டேன்''

என்று வீரம் பொங்கக் கூறுவதையும், வஞ்சகத்தால் அவரும் இராவணனை இகழ்ந்து கூறுவதையும் இதன்மூலம் அறியலாம். அவ்வாறு குலசேகரர் கோபம் கொள்ளும்போது இறைவன் காட்சி தந்து அமைதியை உண்டாக்கினான் என்று குருபரம்பரை கூறுவதைாக அறியலாம். சங்க காலத்துக்குப் பிறகு இராமாயணக் கதையைப் பதிகமாகக் கூறியது குலசேகரரே என்பதையும் 'தசரதன் புலம்பல்' என்ற பதிகத்தில் அறியலாம். இராமன் கானகம் சென்ற நிலையைத் தாங்காது ஓர் பதிகம் படைத்துக் காட்டுகிறார். இராமாயணத்தில் மூன்று பதிகம் படைத்த ஆழ்வாருக்கு வைணவர்கள் பெருமாள் என்றே குலசேகரரை அழைத்தனர்.

அறுபத்து மூவரின் வரலாற்றைச் சேக்கிழார் பெரிய புராணத்தில் படைக்க சுந்தரரின் தில்லைவாழ் அந்தணர் என்னும் பதிகம் கிடைத்தது. அதுபோன்று இராம காதையைப் பாட, குலசேகரருக்கு அங்கணெடு மதில் என்னும் பதிகம் படைத்ததை அறியலாம். எனவே குலசேகரரால் கம்பருக்கு இராமாயண நுட்பம் கிடைத்தது என்பதையும் அறியலாம். இராமன் தன் மாற்றந்தாயாகிய கைகேயின் வாக்குபடி கானகம் செல்கிறான். நகரத்து மக்களும், சிற்றரசர்களும் அரசாளுவதிலிருந்து கானகம் செல்ல கைகேயி கூறினாளே என்று புலம்பினர். அதனைக் கேட்ட குலசேகரர் தன் தந்தையாக நின்று புலம்பினர். இராமனே கொடிய கொல்லுடைய என் கடுமொழி கேட்டுப் பெருநிலத்தை ஆள விட்டுவிட்டு, வெகுவிரைவில் வெற்றி தர வல்லவையான யானையும், தேரும், குதிரையுமான படைகளைவிட்டுக் காட்டை அடைந்தாயே என்று புலம்புகிறார்.

''கொல்அணை வேல் விரி நெடுங்கண் கௌசலை தன் குல மதலாய்
குனிவில் ஏந்தும்

மல் அணைந்தவரைத் தோளா வல்வினையேன் மனம் உருக்கும்
வகையை கற்றாய்!

மெல் அணைமேல் முன் துயின்றாய் இன்னு இனிப்போல் வியன் காண
மரத்தின் நீழற்

கல் அணைமேல் கண் துயிலக் கற்றனையோ ? காகுத்தா ? கரிய
கோவே'' என்று கூறுகிறார்.

வேல்போன்ற செவ்வரி பரந்த கண்களையுடைய கோசலையின் குலத்தில் தோன்றியவனே. என்குமரா வில்லேந்திய மலைதோளா! என் மனம் உருக செய்பவனே, கரு நிறத்தானே, மென்மை படுக்கையில் உறங்கியதைவிடுத்து. கொடிய காட்டில் இலையற்ற மரத்தின் நிழலில் கற்களைப் படுக்கையாகக் கொண்டு கண் வளர எப்படி கற்றுக் கொண்டாய் என்று தசரதன் தன் மகனின் துயரினைக்கேட்டு இறந்தது போல, குலசேகரரும் மனமுறுகிப் பாடுகிறார். இராமனைத் தன்பிள்ளையாகப் பாவித்து பாடும் பக்திசுவை மக்களின்

உள்ளத்திலும் நிலைப்பெற்றுள்ளதை இதன் மூலம் அறியலாம்.

தீவினை கொண்ட என்னை உருக்கும் மகனே! யானைகள் அலையும் காட்டில் ஏதேனும் இடையூறுநேருமோ என என் மனம் அஞ்சுகிறது. அத்தகைய பாவங்களைத் தாங்கிக் கொண்டு என் நெஞ்சம் பிளக்காமல் இருக்கிறதே எனத் தன் ஆற்றாமை உணர்வை வெளிபடுத்துகிறார்.

"மாபோகும் நெடுங்காமை வல்லினையேன் மனமுருக்கும் மகனே இன்று
நீ போக, என் நெஞ்சம் இருபிளவாய்ப் போகாதே நிற்குமாறே"

என்று பாடுவது, கம்பனையும் மிஞ்சி நிற்கும் பக்தியுணர்வைக் குலசேகரர் பாசுரத்தில் அறியலாம்.

மெல்லடிகள் கூர்மையான கற்கலால் வலிக்கும்படி குருதி பெருகவும், வெய்யிலால் துன்புறவும், பசியால் வாடியும் காட்டிலிருக்க, உன்னை நான் பார்த்திருந்தும் தடுக்க முடியாமல் தவிக்கின்றேனே என்கிறார். உன் அழகையும், இனிய மொழியையும் இழந்து உன்னைத்தழுவி உச்சி முகரும் பாக்கியமற்று இழிந்தவனாகிய நான் இன்னும் உயிரோடு இருக்கின்றேனே என்கிறார். அதனை,

"அம்மா! என்று உகந்து அழைக்கும் ஆர்வச் சொல்கேளாதே அணிசேர் மார்வம்
என் மார்வத்தை அழுந்தத் தழுவாதே முழுசாதே மோவது உச்சி!
கைம்மாலின் நனயன்ன மென்னடையும் கமலம்போல் முகமும் காணாது
எம்மானை என் மகனை இழந்திட்ட மழி தகையேன் இருக்கின்றேனே"

தன் மகனை அழகு பார்க்கும் பெற்றோர்கள் இருக்க, மாறாகத் தன்மகனைக் கானகம் அனுப்பிவிட்டு தான் அரசு புரியும் இழிந்தவனாக ஆகிவிட்டேனே என்று புலம்புகிறார்.

இன்று நான் செல்லவேண்டிய வனத்திற்கு என் மகன் செல்வதும், அவன் இருக்க வேண்டிய அரியாசனத்தில் யான் இருப்பதும் அழகாகுமா என்று வசிட்ட முனிவரிடமும், சுமந்திரரிடமும் நீதி கேட்கிறார். இவ்வளவு மனவருத்தத்திற்கும் காரணமான கைகேயியை இம்மண்ணில் வாழ உனக்கு நாணமில்லையா என்று உணர்ச்சிப் பொங்கக் கூறுகிறார்.

"பொன்பெற்றார் எழில் வேதப் புதல்வனையும் தம்பியையும் பூவை போதும்
மின்பற்ற நுண்மருங்கில் மெல்லியல் என் மருகியையும் னத்திற்போக்கி,
நின்புற்றா நின்மகன் மேல்பழி விளைத்திட்டு, என்னையும் நீள் வானில் போக்க,
என் பெற்றாய் ? கைகேயி இருநிலத்தில் இனிதாக இருகின்றாயே"

என்று கேட்கிறார்.

கைகேயைப் பார்த்துச் செல்வத்தைப் பெற்ற வேதங்களை ஓதிய மூத்த மகன் இராமனையும், இலட்சுமணனையும், மின் இடையாள் சீதையையும் காட்டுக்கு அனுப்பிவிட்டு நீ என்ன பயன் அடைந்தாய் என்று கேட்கிறார். உன்னிடம் அன்புள்ள பரதன் மேல் பழியை உண்டாக்கிவிட்டு என்னையும் மேலுலகத்திற்குப் போகும்படி செய்ததால் நீ சாதித்த செயல்கள் என்ன ? என்று வினவுகிறார்.

பெண்கள் நாணத்தை முதலிடமாகக் கற்புக்கு அடுத்து காத்து வருகின்றனர். 'மானம் இழந்தப்பின் வாழமை முன் இனிதே' என்று அறநூல்கள் கூறுகின்றன. கைகேயி அத்தகைய உணர்வுகளை துறந்து இவ்வுலகில் வாழ்கின்றாயா என்று இழித்துப் பேசும் பாங்கை இதன் மூலம் அறியலாம்.

"முன்பொரு நாளில் மழுப்படை பரசுராமனுடைய வில்லை வாங்கி, அவன் தவபலம் முழுதும் அழித்தவனே! உன் மேன்மையை, உன்னை மகனாக அடைய நான் அடைந்த துயரை உன் தாய் கோசலைக்குப் பிரிவினால் ஏற்பட்ட வருத்தத்தை ஒரு பொருட்டாக மதியாது, என்னையும் என் வாக்கையும் உண்மை என்று கருதி காடேகும் அப்பனே! பெருந்தோளனே! இனிப் பிறவிகள் தோறும் உன்னையே பிள்ளையாகப் பெறுவேன்" என்கிறார். அதனை,

"முன்ஒருநாள் மழுவாளி சிலைவாங்கி அவன் தவத்தை மற்றும் செற்றாய்
உன்னையும் உன் அருமையையும் உன்மோயின் வருத்தமும் ஒன்றாகக் கொள்ளாது
என்னையும் என் மெய்யுரையும் மெய்யாகக் கொண்டுவனம் புக்க எந்தாய்!
நின்னையே மகனாகப் பெறப் பெறுவேன் ஏழ்பிறப்பும் நெடுந்தோள்வேந்தே"

என்று கூறுவதால் மக்களினம் சொன்ன சொல்லைக் காப்பாற்றும் பாங்கும், முன்னோர்கள் கூறும் மொழிகளைத் தவறாமல் மதிக்கும் நிலையையும் இராமன் செய்து காட்டினான். அத்தகைய பிள்ளைகளைத் தான் பெற்றோர்கள் விரும்பினர் என்பதையும் இதனால் அறியலாம். ஏழு பிறப்புக்கும் உன்னையே மகனாகக் கொள்வேன் என்பது தசரதனின் பெருமிதமாக அமைகின்றன.

"ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன் மகனை சான்றோன்
எனக் கேட்ட தாய்".

என்ற வள்ளுவரின் வாக்கிற்கேற்ப, தசரதன் ஏழேல் பிறப்புக்கும், மறுபிறவிகளிலும் தன் மகனாக பெறுவேன் என்பதை இதனால் ஒப்பிட்டு அறியலாம். மனித குலத்தில் சிறந்தவனாகிய இராமன் "கோசலையும், சுமத்திரையும் மனம் வருந்த, கூன் உடம்பாகிய மந்தரையின் மொழி கேட்ட கைகேயின் மொழியை, மிக மதித்து காட்டை விரும்பினாய். நானும் சீர் சிறக்கச் செய்த செவிய இந்நகரைவிட்டு மேலுலகத்தையே மிக விரும்பி செல்கின்றேன்" என்கிறார். இதனால் வேறு தாயாக இருப்பினும் மூத்தோர்களை மதிக்கும் நல் ஒழுக்கத்தையும், சொன்ன சொல்லைக் காக்கும் வண்ணம் தம் வாழ்வை அமைத்துக் கொண்ட இராமனை, தசரதன் மூலமாக மக்களுக்கு உணர்த்துகிறார் குலசேகரர்.

தன் மகன் காட்டுக்கு வனவாசமாகச் செல்வதைப் பொறுக்காத தசரதன் மூலமாக உறையூர் அரசனாகிய குலசேகரருக்கு தெரிந்து அவர் இராமாயணத்தின் கதைச் சுருக்கத்தையே பதிகத்தில் அடக்கிய சிறப்பும் இதனால் அறியலாம்.

கோசலை, தசரதன், கைகேயி, இராமன், இலட்சுமணன், பரதன், சுமத்திரை, வசிஸ்டமுனிவர், கூனியாகிய மந்தரை ஆகியோரின் பாத்திரங்களைப் படைத்துக் காட்டியுள்ளார். தன் மகன் பெற்றோர்களுக்குத் செய்யும் கடனையும், பெற்றோர் மக்களுக்குச் செய்யும் கடயையும் தந்தையாகவே நின்று குலசேகரர்

உணர்த்தும் பாமாலைகளையும் பக்தி உணர்வையும், தமிழ்ப் பற்றையும், இதன்மூலம் அறியலாம்.

வைணவர்களின் பக்தி பாசுரங்களையும், திருமாலின் அவதாரங்களையும் கூறுவதோடு, ஆழ்வார்களின் சிறப்பு, குலசேகரர் காட்டும் பக்தி இதன்மூலம் அறிய முடிகிறது. இராமாயண அரசாட்சி, சொல் தவறாமை போன்ற கருத்துகளை மக்களுக்குப் புகட்டும் வண்ணம் குலசேகரர் படைத்துக் காட்டுகிறார். பிறர் துயரையும் தான் பெற்ற துயரமாகக் கொண்டு இறைவன்பால் மாறாத காதல் கொண்டுள்ள சிறப்பையும் அறியமுடிகின்றது.

# 6. பெருமாள் திருமொழியில் பக்தி

'பெருமாள் திருமொழியில் பக்தி' என்ற இயலில், பெருமாள் திருமொழியின் சொல் விளக்கம், அரங்கனைக் காணவேண்டல், ஆனந்த கண்ணீர் விடுதல், அடியவர்களுக்கும் அடியவனாதல், பித்தனாய் போற்றுதல், திருப்பதிவாசன், போன்றனவற்றைத் தொகுத்தும் ஆராய்ந்துள்ளன. இறைவனிடம் தாழ்ந்த பிறவி வேண்டல், அரசாட்சி துறந்த மனசாட்சி, உவமை வழிக்காணும் பக்தி, கோல்நோக்கி வாழும் குடிப்பெருமை, மருத்துவனாக்கல், மழையாக நினைத்தல், குலசேகரர் இராமாயணம் போன்றவற்றைப் பகுத்து ஆராய்ந்துள்ளன. மேலும், குலசேகரரும் கம்பரும், ஒன்றுபடும் பகுதிகளைத் தொகுத்து ஆராய்ந்துள்ளன.

மக்களினம் தோன்றிய காலத்தில் சிந்திக்கத் தெரிந்தவுடன் ஐம்பெரும் பூதங்களாகிய நிலம், நீர், தீ, காற்று, வான் ஆகிய பரம்பொருளைக் கண்டு அஞ்சினர். நாளடைவில் மக்களினம் நாகரிக வளர்ச்சியில் வளர்ந்து அவரவர்கள் நினைத்த பரம் பொருளையே முழுமுதலாகக் கொண்டு வணங்கினர். அப்பொருள் மீது அளவில்லா அன்பு செலுத்தினர். அதனையே நினைத்து பித்தானார்கள். அந்நிலையை தான் பக்தி காதல் என்று கூறி மகிழ்ந்தனர். தமிழ்நாட்டில் பலநெடுங்காலமாக வளர்ந்து வந்த காதலை உருவம் கொடுக்காமல் இருந்திருக்கலாம். பின்பு தொல்காப்பியர் காலம், சங்ககாலம், காப்பியக் காலம், சங்க மருவிய காலங்களில் ஆங்காங்கே திருமாலை முழுமுதலாகக் கொண்டு வைணவத்தை வளர்த்தனர். பக்திக்கு உருவம் கொடுத்து சைவம், வைணவம் எனத் தமிழ்நாட்டில் மறுமலர்ச்சிப் பெற்றது பல்லவர் காலங்களில் தான் என்பதைத் தமிழ் இலக்கிய வரலாறு உணர்த்தும்.

## பெருமாள் திருமொழியின் சொல் விளக்கம்

முற்காலங்களில் மக்கள் குலம், கோத்திரங்களைப் பின்பற்றி நாகரிகத்தை வளர்த்தனர். தம்பிள்ளைகளுக்குக் குலபெயரையே சூட்டி மகிழ்தலும் பாட்டனார் பெயரை வைத்து வர்க்கத்தை உருவாக்குவதும் பற்றி நாட்டுப்புற இலக்கியங்கள் உணர்த்தும். திருமாலின் மீது அதிக மால் கொண்ட வைணவர்களில் குலசேகரரும் ஒருவர். குலசேகரருக்குப் பெருமாள் என்ற பெயரும் உண்டு. அதனால் அவர்பாடிய பிரபந்தத்திற்குப் பெருமாள் திருமொழி என்று வழங்கினர். வைணவ ஆழ்வார்கள் பாடிய பிரபந்தங்களை நாதமுனிகள் என்ற பெரியவர் தொகுத்து அடைவு செய்துள்ளார். திருவிருத்தம், திருவாசிரியம், திருவாய்மொழி, பெரியாழ்வார் திருமொழி, நாச்சியார் திருமொழி போன்ற நூல் பெயர்களே வைத்துள்ளனர். எனவே பெருமாள் இறைவன் மீது கொண்ட காதலைப் பாடிய நூலுக்குப் பெருமாள் திருமொழி என்று அழைத்துள்ளனர்.

முற்கால இலக்கியங்களில் சான்றோர் வாய்மொழிகளைத் திருமொழி என அழைத்துள்ளனர். அருகதேவனின் செயல்களைப் 'பெருமகன் திருமொழி', 'ஞானத் திருமொழி' என்று இளங்கோவடிகள் கூறுவர்.

"திருமொழியாய் நின்ற திருமாலே" என்று இறைவனை அழைப்பர். எனவே திருமொழியாக நின்ற இறைவனையே தம் நூல்களுக்குப் பெயர் சூட்டி

மகிழ்ந்தனர் என்பதை இதன்மூலம் அறியலாம். நாலாயிர திவ்விய பிரபந்தத்தில் இவ்வாழ்வாரின் திருமொழியை ஐந்தாவதாக அமைத்துள்ளனர்.

குலசேகராழ்வாரின் திருமொழியில் பத்து அல்லது பதினொரு பாசுரங்கள் கொண்டு, பத்துப் பதிகங்களாக அமைகின்றன. வைணவர்களின் வரிசைப்படி ஒவ்வொரு பதிகத்திற்கும் திருமொழி என்று அழைத்துள்னர். இப்பத்து பதிகங்களில் நூற்று ஐந்து பாசுரங்கள் கொண்டுள்ளன என்பதை, "செஞ்சொல்மொழி நூற்றஞ்சும் செப்பினான் வாழியே" என்று கூறுவதால் அறியலாம்.

ஒவ்வொரு பதிகத்திலும் பதினொரு பாசுரங்களாக இருளிரிய, (1) ஊனேறு செல்வம் (4) ஆலைநீள் கரும்பு (7) மன்னுபுகழ் (8) வன்காளினினை (9) அங்கணெடுமதிள் (10) ஆறு பதிகளும் அமைகின்றன. தேட்டருந்திறல் (2) தருதுயரம் தடாயேல் (5) ஏர்மலர்ப் பூங்குழல் (6) ஆகிய மூன்று பதிகங்களில் பத்துப் பாசுரங்களும், மெய்யில் வாழ்க்கையை ஆகிய மூன்றாவது பதிகத்தில் ஒன்பது பாசுரங்களே உள்ளன. இப்பதிகத்தில் உள்ள ஒன்றிரண்டு பாசுரங்கள் கிடைக்காமல் போனதைப் பற்றி பலர் பலவாறு கூறுகின்றனர்.

## அரங்கனைக் காண வேண்டல்

திருமால் மூவுலகை அளந்ததுபோல், மூவேறு தலங்களில் காட்சி தருகிறார். அத்தலங்களில் ஒன்று திருச்சியில் அமைந்த திருவரங்கமாகும். இத்தலத்தில் கிடந்த கோலமாக உள்ளார். காவிரி கரையில் அமைந்த இத்தலத்தைப் பல அடியவர்கள் பாடி பரவசமுற்றனர். இராமாயணத்தை அரங்கேற்றிய இத்தலத்தைபன்னிரு ஆழ்வார்களும் பாடியுள்ளனர். தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருமாலை, திருப்பள்ளி எழுச்சி, போன்றவை அரங்கனுக்கே அர்பணிக்கப்பட்டது. நம்மாழ்வாரின் 'கங்குலும் பகலும்' என்னும் திருவாய்மொழியும், பாடியுள்ளார். முதலாழ்வார்களும், பெரியாழ்வார் ஆண்டாளும், திருமழிசை ஆழ்வாரும் பாடிய பாசுரங்கள் திருவரங்கனைக் கொண்ட திருவரங்க தலத்தையே பாடியுள்ளனர். அவர்களில் திருமங்கை ஆழ்வார் 72 பாசுரங்களும், தொண்டரடி பொடியாழ்வார் 55 பாசுரங்களும், பெரியாழ்வார் 35 பாசுரங்களும் பாடியிருப்பினும் குலசேகராழ்வார் 30 பாசுரங்களே பாடி, "தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்" என்னும் சிறப்பு பெற்றவர் குலசேகராழ்வாரே ஆவார். திருவரங்கத்தே பள்ளி கொண்ட இறைவனைப் பதின்மர் பாடும் பெருமாள் என்றும் கூறுவர். இருள் சிதறிப் போகும்படி ஒளிவிடும் மாணிக்கங்கள் விளங்குகின்ற நெற்றியும், சிறந்த புள்ளிகளும், அழகான ஆயிரம் படங்களைக் கொண்ட ஆதிசேடனுடன் படுக்கையில் பொருந்தி, தெளிந்த நீர் புரளும் காவேரி அலைகளாகிற் கைகளாலே, திருவடிகளைப் பிடிக்கத் திருக்கண், வளர்ந்தருளுகின்ற நீலமணி போன்றவனை அழகெலாம் திரண்டு வடிவெடுத்தவனை, என் கண்களால் கண்டு மகிழ்வது எந் நாளோ ? என்று பாடுகிறார். அதனை,

"இருள இரியச்சுடர்–மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தி அணி பணம் ஆயிரங்கள் ஆர்ந்த

அரசு–அரசப் பெருஞ்சோதி அனந்தன் என்னும்
அணிவிளங்கும் உயர் வெள்ளை–அணையை மேவித்
திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளம்
கருமணியைக் கோமனத்தைக் கண்கொண்டு என்
கண்ணிணைகள் என்று கொலோ களிக்கும் நாளே"

என்று திரு அரங்கநாதனை முதலில் அடியெடுத்துப் பாடி மகிழ்கிறார். எதிரிகள் தன்னருகே நெருங்கி வராமல் ஆதிசேடனை நெற்றியில் கொண்ட பிரானைக் காணும் நாள் எப்பொழுதோ என்று வேண்டுகிறார்.

அனைத்து உயிர்களையும் படைக்கும் பிரமனும் நான்கு நாவினால் போற்றி, நான்முகங்களிலும் வேதத்தை ஓதி, வணங்குகின்ற அணி அரங்கனைக் காணும் நாள்களை எண்ணிப் பரவசமுறுகிறார்.

"எம் மாண்பின் அயன் நான்கு நாவினாலும்
எடுத்து ஏத்தி ஈரிரண்டு முகமும் கொண்டு
எம்மாடும் எழிற்கண்கள் எட்டினோடும்
தொழுது ஏத்தி இனிது இறைஞ்ச நின்ற செம்பொன்
அம்மான்தான் மலர்க் கமலக் கொப்பூர் தோன்ற
அணி அறங்கத்து அரவணையிற் பற்றி கொள்ளும்
அம்மான்தன் அடியினைக் கீழ் அலர்கள் இட்டு அங்கு
அடியவரோடு என்று கொலோ அணுகும் நாளே"

என்றுப் பாடிப் பரவசமுறுகிறார்.

திருவரங்கத் தலக்கை காணுவதற்கு முன்பே அத்தலத்தையும் பாம்பனையில் துயில்புரியும் அரங்க நாதனையும், அடியவர்களையும் மனதால் அறிந்து கற்பனைக் கவிதையாகப் படைத்துக் காட்டுகிறார். இத்தகைய காட்சிகள் காண்பதற்கு முன்பே மனதில் பதிவதும் உண்டு. எனவே திருவரங்கம் அமைந்துள்ள இயற்கை சூழலில் தன் இறையுணர்வைக் கலந்து பாடுவதில் கவிஞர்களுக்குப் பெருமை. அதுபோன்று அடியவர்களைக் கண்டு தரிசித்தால் எப்பெருமானைப் பார்த்துவிடலாம் என்ற நம்பிக்கையோடு கூறும் பாங்கை இதனால் அறியலாம்.

குதிரை வடிவான கேசி அசுரனின் வாயைப் பிளந்தும், ஆயர்களுக்காகக் கோவர்த்தன கிரிமலையைக் குடையாகப் பிடித்தும், காத்தப் பெருமானை மலர் தூவி வழிபடும் நாள் எப்போது என்ற ஏக்கத்தில் பாடுகிறார் குலசேகராழ்வார்.

இதனால் ஆயர் குலத் தலைவனாகவும் தேவர்குலத் தலைவனாகவும் எல்லா உயிர்களிடத்தும் அன்பு காட்டின நிலையாகப் படைத்துக் காட்டுவதை அறியலாம்.

## ஆனந்த கண்ணீர்

மக்களினத்தில் அழுகை என்பது அவலக்குறிப்பாகவே அமைகிறது. ஆனால் அறியாத ஒரு பொருளையோ, காணாதக் காட்சிகளையோ,

பொருளையோ கண்டால் மனம் மகிழ்வு பெறும். அத்தகைய பொருளாகக் கண்ணனைக் கண்டு ஆனந்த கண்ணீர் வடிக்கும் நாள் எந்நாளோ என்று பாடுகிறார். எல்லா மக்களும் மகிழ்ச்சியுடன் இருக்கவே நினைப்பார்கள். கொலை, சினம், கொடுமை போன்ற தீய குணங்களை நீக்கி, ஐம்புலன்களையும் அடக்கி, அடியவர்களை வணங்கி காவேரியால் சூழப்பட்ட அரங்கனைக் கண்டு மகிழ்ச்சிக் கண்ணீர் வடிக்க நினைக்கிறார். அதனை,

"மறம் திகழும் மனமொழித்து வஞ்சம் மாற்றி,
ஐம்புலன்கள் அடக்கி இடர்ப் பாரத்துன்பம்
துறந்து இருமுப் பொழுதேத்தி எல்லையில்லாத்
தொன்னெறிக்கண் நிலை என்ற தொண்டரான
அறந்திகழும் மாயோனைக் கண்டெடன் கண்கள்
நீர்மல்க என்று கொலோ நிற்கும் நாளே"

உயர் பதவியில் உள்ளவர்களை நேரடியாகக் காணமுடியாது. அவ்விடத்திலிருக்கும் பணியாளர்களைக் கொண்டுதான் காண முற்படுவர். அதுபோல அரங்க நாதனைக் காண அவனுக்குத் தொண்டு செய்யும் அடியவர்களை வணங்கினால் பெருமானைக் கண்டுவிடலாம் என்ற எண்ணத்தோடு அடியவர்களுக்கு அடிமை தொழில் செய்ய முற்படுகிறார். அதனை,

"தேட்டு அருந்திரல் தேனினைத் தென்
அரங்கனைத் திருமாது வாழ்
வட்டம் இல் வனமாலை மார்வனை
வாழ்த்தி மால் கொள் சிந்தையராய்
ஆட்டம் மேவி அலர்ந்து அழைத்து–அயர்வு
எய்தும் மெய்யடியார்கள் தம்
ஈட்டம் கண்டிடக் கூடுமேல், அது
காணும் கண் படன் ஆவதே"

தேடி அடைவதற்குத் தேன் போன்ற தென் அரங்கனை, திருமகள் வாழ் மார்பில் துழாய் மாலையை அணிந்துள்ளவனை காண்பதற்கு, அடியவர்களைக் காண்பதே நாம் கண்ணின் பெருமை என்பதை அறிகிறார். ஒருத்தி பால் காதல் கொண்ட இளைஞன் காணக்கூடியப் பொருள் எல்லாம் தன் காதலியாகவே நினைப்பது வழக்கம். அத்தகைய உணர்வுகளில் பக்தி நிறைந்து திருமாலின் உருவமாகவே கனவு காணுகிறார் குலசேகரர். அதனை,

"உன்னினால் உன்னையே உன்னும் என் மனம்
பின்னை வேறொருவரைப் பிடிக்குமா சொலாய்
பன்னுமோ ? கனப்புலி பசிக்குப் புல்லையும்
தின்னுமோ ? பெண்ணைவாழ் திருவரங்கரே"

என்று கூறுவதன் மூலம் குலசேகராழ்வார் எல்லாப் பொருள்கள் மீது கொண்ட பற்றுணர்வும் திருமாலாகவே நினைத்து மனமுறுகி பாடுவதை ஒப்பிட்டு அறியலாம்.

மக்களின் பாவங்களை நீக்கிக் கொள்ள புனித யாத்திரை சென்று நீராடுவது வழக்கம். ஆனால் திருமாலின் செயல்பாடுகளான, மராமரங்களைத் துளைத்ததும், பசுக்கூட்டங்களை மேய்த்தும் இருக்கும் நிலைகளை அறிந்து ஆடிபாடி மகிழ்ந்தால் கங்கையில் நீராடுவதைக் காட்டிலும் புனிதமானதாகக் கருதுகிறார்.

அடியவர்களின் பாதங்களிலே வணங்கினால், கிடைப்பதற்கரிய பரம்பொருளான ஐஸ்வரியத்தைப் பெற்றுவிடலாம் என்ற நம்பிக்கையோடு அழுது புலம்பி அதுபோல் வரும் கண்ணீரால் திருக்கோயில் சேறாகி, அழகிய அச்சேற்றைத் தலையில் தேய்த்து மகிழ்வேன் என்கிறார். சங்க காலப் பெண்கள் தம் கூந்தலுக்குக் களிமண்களை தேய்த்து நீராடுவது வழக்கம். அதுபோன்று குலசேகரும் அவ்வாறு தேய்த்தால் புத்துணர்வு பெறும் என்ற நம்பிக்கையோடு கூறியுள்ளதை ஒப்பிட்டு அறியலாம்.

அடியவர்கள் எல்லாம் தம் பெருமானை எப்போதும் நினைத்துப் போற்றுவதைக் கண்டால், என் மனமும் சிலிர்த்து மெய்யடியார்கள் மீதே பற்றுக் கொள்கிறது என் நெஞ்சம் என்று கூறுகிறார்.

## அடியவர்க்கும் அடியவன்

இறைவனுடைய திருவடித் தாமரையைத் தன்பால் சூடும் பக்தி இல்லாத பாவிகள் மகிழ்வுறும்படி தீது இல்லாத நன்னெறிகளைக் காட்டி, அரங்கனுக்கே பக்தி செய்யும் அடியவர்களின் உள்ளத்தில் மறுபிறப்பிலும் அடிமை செய்ய வேண்டும் என்று என் நெஞ்சம் ஆசைப்படுகிறது என்கிறார் குலசேகரர்.

குளிர்ந்த பால், தயிர், வெண்ணெயையும் ஒரே காலத்தில் அமுது செய்தவுடன் யசோதை கையும் களவுமாகப் பார்த்து அவளால் பிடித்துக் கட்டப்பட்ட தோள்களையுடைய எம் அரங்க நாதனுக்கு ஆட்பட்டவர்களாய் நாராயண மந்திரத்தையே போற்றும் அடியார்களின் திருவடிகளில் துதித்து வழிபட என் மனம் ஆசைப்படுகிறது என்கிறார்.

"தோய்த்த தண் தயிர் வெண்ணெய் பாலுடன்
உண்டலும் உடன்று ஆய்ச்சி கண்டு
ஆர்த்த தோள் உடை எம்பிரான் என்
அரங்கனுக்கு அடியார்களாய்
நாத்தழும்ப எழ நாரணா! என்று
அழைத்து மெய் தழும்பத் தொழுது
ஏத்தி இன்ப உறும் தொண்டர் சேவடி
ஏத்தி வாழ்த்தும் என் நெஞ்சமே"

என்று பாடுகிறார். நாராயணனின் புகழ் மந்திரமாகிய எட்டெழுத்தை நாவால் ஓதி, மனதால் இன்புற்றுருகும் அடியவர்களுக்குத் தொண்டு செய்வதே சிறந்த கடமை என்று கூறுவதால் யாக்கை, செல்வம் ஆகிய நிலையற்ற தன்மையை உணர்ந்து நிலையான தொண்டினைப் பின்பற்றினார் என்பதை அறியலாம். திருவரங்கனைப் பாடிப் பரவசமுறும் அடியார்களின் ஒலிக்கேட்டு என் தேகந்தின்

மயிர் இலைகள் சிலிர்க்கின்றது. எனவே அத்தகைய அருள் கொண்ட அடியார்களையே என் உள்ளம் போற்றுகிறது என்கிறார்.

"ஆதி அந்தமாக எக்காலத்தும் ஒரே சீராக வாழும் இறைவன்; எல்லாப் பொருளிலும் நிறைந்து காணப்படுகிறான். அத்தகைய இறைவனின் திருவடிகளைத் தலையில் ஏற்கும் பக்தி இல்லாத பாவிகளும் பயனுறும்படி எல்லா இடங்களிலும் நல்வழி காட்டும் திருவரங்கனுக்கே பேரன்பு பூண்டிருக்கும் அடியார்களிடத்தில் மறுபிறவியிலும் என்மனப் பற்றுக்கோடாய் இருக்கும்" என்கிறார்.

"ஆதி அந்தம் அனந்தம் அற்புதம்
ஆன வானவர் தம்பிரான்
பாதமா மலர் சூடும் பத்தி
இலாத பாவிகள் உய்ந்திடத்
தீதில் நன்னெறி காட்டி எங்கும்
திரிந்து அரங்கன் எம்மானுக்கே
காதல் செய் தொண்டர்க்கு எப்பிறப்பிலும்
காதல் செய்யும் என் நெஞ்சமே"

என்று கூறுவதால், எல்லாம் வல்ல பரம்பொருளாக இருக்கும் இறைவன் தன்னை வேண்டுபவர்களுக்கும் வேண்டாதவர்களுக்கும் பாகுபாடு இன்றி, அருள் பாலிப்பான். அந்நிலையைப் பின்பற்றி தான் சங்ககால அரசர்கள் தன்னை நாடி வந்தவர்களுக்கும், எளியவர்களுக்கும் பரிசில் வழங்கி மகிழ்வான் அத்தகைய மனிதனைத் தான் தெய்வமாகப் போற்றினர்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர் வானுரையும்
தெய்வத்துள் வைக்கப் படும்"

என்ற வள்ளுவரின் வாக்கிற்கேற்ப, அரசர்கள் தெய்வ பக்தியைப் பின்பற்றி தனக்கென வாழாமல் நாட்டுக்காகவும், நாட்டு மக்களுக்காகவும் வாழ்ந்தனர் என்பதை இதனோடு ஒப்பிட்டு உணரலாம். குலமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்,

"யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய" என்று வாழ்ந்தவனை, தெய்வத்தோடு ஒப்பிட்டுக் கூறுவதை இதன்மூலம் அறியலாம்.

## பித்தனாய்ப் போற்றுதல்

மனிதனின் பரிணாம வளர்ச்சியில் கிடைப்பதற்கரிய எப்பொருளைக் கண்டாலும் அதனை அடைய முற்படுவர். சில காரணங்களால் அவை கிடைக்காமல் போனால், அதன் ஞாபகமாகவே பித்துப் பிடித்தார்போல தன்னை மாற்றிக் கொள்வதை அறியலாம். பித்துப் பிடிப்பதற்குப் பல காரணங்களைக் கூறலாம். அதில், பணம், மண், பொருள், பெண் போன்ற ஆசைக்காரணமாகவே இவை அமைகின்றன. பக்தி இலக்கியங்களில் காண்பதற்கு அரிதான

பரம்பொருளைப் பெறுவதற்கு அதன் புகழ் பற்றியே பாடியவைதான் பக்தி பாசுரங்கள் ஆகும். காரைக்கால் அம்மை தன்னையும், தன் இளமையையும் பயன்படாமல் போவதை நினைத்துச் சிவன்பால் பேய் பிடித்தார் போலப்பாடி பரவசமுற்றதை அறியலாம். அத்தகைய ஞானிகளைத்தான் மனிதனுக்கு அப்பாற்பட்டு தெய்வமாகப் போற்றுகின்றனர். குலசேகரரும் பொருள், போகம் மீது பற்றில்லாமல், ஐந்து ஆசைகளையும் வெறுத்து மண், பொன், பெண்ணாசைகளை வெறுத்து இறைவன்பால் தன்னையே அர்பணிக்கிறார்.

"என்னைப்போல் அடியவர்களாக இல்லாத மக்களிடத்தில் நான் சேர மாட்டேன்; விண்ணக வாழ்வையும் வேண்டேன்; அமரருக்குத் தலைவன் அரங்கநாதனிடம் ஏழு பிறவியிலும் பித்தனாய் இருப்பேன்" என்கிறார். அதனை,

"எத்திறத்திலும் யாரொரும் கூடும் அச்
சித்தர் தன்னைத் தவிர்த்தனன் செங்கண்மால்;
அத்தனே! அரங்கா என்று அழைக்கின்றேன்;
பித்தனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே"

என்கிறார். எனவே மக்களினம் தற்பொழுது பொருள் போகத்திற்காகவும், மண், பெண்ணுக்காகவும் தன்னையே அழித்துக் கொள்ளும் நிலையை அறிந்த குலசேகரர் எந்த நிலையிலும் மனம் மாறாமல் மக்களினத்தைப் போல் அடுத்த பிறவியிலும் தவறு செய்யக் கூடும் என்பதை அறிந்து ஏழு பிறப்பிலும் அரங்கனுக்கே பித்தனாவேன் என்று கூறுவதால் நிலையானக் கருத்துகளை அறியலாம். மெய்யில்லாத வாழ்க்கையை நினைத்து, அடியவர் அல்லாத மக்களிடம் எந்த உறவும் கொள்ள மாட்டேன் என வெறுத்துப் பேசுவதை இதன்மூலம் அறியலாம். தன் உடலை ஆத்மாவாகவும், சிற்றின்பத்தையே பேரின்பமாக நினைக்கும் மக்களினத்தைக் காண்பதோடு மட்டுமின்றி பேசவும் மறுப்பதை அறியலாம். அரங்கனிடமே அடைக்கலமாகக் கொண்டு பித்தனாய் இருக்க பெருமைபடுவதை இதன் மூலம் அறியலாம்.

மங்கை, உண்டி, உடை, உறவு, தீயவர், போன்ற மக்களையும், பொருள்களையும் வெறுக்கிறார் குலசேகரர். இத்தகைய பொருள்கள் மீது பற்றுக் கொண்டவர்களைப் பித்தர் என்று கூறும் பாங்கை இதனால் அறியலாம். இவ்வாறு முதல் மூன்று பதிகங்களில் திருவரங்கனைப் புகழ்ந்து காணத்துடித்தும், அடியவர்களுக்கு அடியவராகியும், திருவரங்கன் மீது பித்துப் பிடித்தும் பாடிய பாசுரங்களை அறியப்படுகின்றது.

## 7. திருப்பதி வாசன்

தொல்காப்பியத்தில் வகுத்த எல்லைப்படி, திருவேங்கடம் தென்குமரி ஆயிடை தமிழ்கூறு நல்லுலகம் ஆகும். திரு என்பது அழகு; வேங்கடம், வெங்கடேசன், வடக்கு எனப் பொருள்படும் இத்தலத்திற்குப் பல்வேறு பெயர்கள் சூட்டப்படுகின்றனர். திரு என்பது அழகு, பதி என்பது கடவுள். அழகிய கடவுள் இவ்வாறு பலவாறு கூறுகின்றனர். இத்தலத்தில் 'திருமால் நின்ற கோலத்தில்' காட்சி தருகிறார். நாட்டு மக்கள் அத்தலத்திற்குச் சென்று, நன்மை பெற்றதாக மக்களினம் பேசும் புகழ்வாய்ந்த தலமாகத் திருவேங்கடம் அமைகிறது. சிறப்பு மிக்க அத்தலத்தில் யாதேனும் ஒரு பொருளாய் தோன்றி புகழ்பெற பாடுகிறார் குலசேகரர். தமிழ்க் கவிஞராகிய கண்ணதாசன் அப்புகழ் மிக்கத் தலத்தை,

"திருப்பதி சென்று திரும்பி வந்தால்
திருப்பம் ஆகுமடா"

என்ற பாடலால் படைத்துள்ளதை அறியலாம். அத்தகைய சிறப்பு வாய்ந்த வேங்க மலையின் சிறப்பையும் ஸ்ரீனிவாசன் இறைவன் பெருமைகளையும் அறியலாம்.

## 8. அரசாட்சி துறந்த மனச்சாட்சியாளர்

மக்களினம் தோன்றியது அரிதான ஒன்றாகும். இச்சூழலில் மக்கள் மக்களாக வாழவில்லை. அதனாலே விலங்கொடு ஒப்புமைப்படுத்தினார் வள்ளுவர். சங்க காலத்திலும் மக்களை மாக்கள் என்றே கூறியுள்ளனர். மனித இனம் மகத்தான பிறவி. இருப்பினும் அவரவர்களின் மன நிலைகள் பொறாமை, ஆசை, வஞ்சகம் போன்ற இழிவான செயல்களைச் செய்வது மனித இனமே எனலாம்.

"அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது
அதனினும் கூன் குருடு செவிடு இன்றி பிறத்தல் அரிது"

என்று மனித இனத்தை ஔவையார் பாராட்டியுள்ளார். பிறவி பெருங்கடலை இறைவனின் திருவடிகளைப் புனையாகக் கொண்டு கடக்கலாம் என்றார் வள்ளுவர். அதனை,

"அறவாழி அந்தணன் தான் சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது"

என்று கூறுகிறார்.

எப்பிறப்பாயினும் அன்போடு ஏற்கும் குலசேகரர் திருவேங்கட மலையில் பிறப்பதையே அவரின் ஆவல். அம்மலையில் பிறத்தலுக்குரிய வேட்கையை வெளிப்படுத்துவதாகத் 'திருவேங்கட மலை தொடர்பு வேண்டல்' என்ற பதிகம் அமைகிறது.

## அஃறிணை பிறப்பு வேண்டும் தகைமையாளன்

உடலை வளர்த்தும், செல்வங்களைப் பெற்றும் உலக மக்களோடு ஒன்றியும் வாழவிரும்பவில்லை. வலக்கையில் சக்கரத்தையும், இடக்கையில் வளைந்த வலம்புரி சங்கையும் கொண்ட இறைவனின் திருவேங்கட மலை ஏரியில் கொக்காக, குருகு (நாரையாக) பிறக்க வேண்டுகிறார்.

"ஊனேறு செல்வத்து உடன்பிறவி யான் வேண்டேன்
ஆனேறு ஏழ் வென்றான் அடிமைத்திறம் அல்லால்
கூனேறு சங்கம் இடத்தான் தன் வேங்கடத்து
கோனேரி வாழும் குருகாய் பிறப்பேனே"[15]
"ஆனாத செல்வத்து அரம்பயர்கள் தன் சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்;
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே"

என்பதால் திருவேங்கடத்தானை எந்நேரமும் கண்ணால் காண்பதாகவே நினைத்துக் குருகாய் பிறந்தாலும், பிற இடங்களுக்குச் செல்ல நேரிடும். அதனால் மீனாய்ப் பிறக்க ஆசைபடுவதை அறியலாம். முற்காலத்தில் ஞானத்தைப் பெற விரும்புவோர் எளிமையான தோற்றம் கொண்டிருப்பதை அறியலாம்.

ஆழ்வார்களுக்கு முன்பும், திவ்விய தேசத்தில் தங்கும் வாழ்க்கையாக விரும்பியுள்ளனர். மாலிருங் குன்றத்தின் அடிவாரத்து வாழும் வாழ்க்கை எமக்கு இயைவதாக என்று பலதேவர் வாசு தேவரிடம் வேண்டியதாக உள்ளதை அறியலாம்.

அவை,

"இருங்குன்றத்து அடிஉரை இயைக எனப்
பெரும்பெயர் இருவரைப் பரவுதும் தொழுதே"

என்று கூறுவதால் பரம்பொருளாகிய இறைவன் குடிகொண்டுள்ள தலத்தில் எப்பிறப்பாகப் பிறந்தாலும் உயர்வாக நினைத்தனர் என்பதை அறியலாம். உடம்பை வளர்த்தும், உயிரைத் தாங்கியும், செல்வத்தைச் சேர்த்துப் பகட்டு வாழ்க்கை வாழ விரும்பவில்லை என்பதை 'உடம்பை வளர்த்தேன் உபாயம் அறியேன், உடல் வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே' என்ற திருமூலரின் வாக்கிற்கேற்ப, நிலையாமை வாழ்வை வெறுத்து, நிலைபெற்றுள்ளதை இதன்மூலம் அறியலாம். அதுமட்டுமின்றி, வைகுந்த வாசலில் நுழைய வேண்டுமாயின் இறைவனின் உமிழ்நீரைத் தாங்கும் பொன் வட்டியாகவும், அம்மலையில் பூக்கும் செண்பக மலராகவும், புதர்களாகவும், கொடிமுடியாகவும், கானாறாகவும் பிறக்க வேண்டும் என்று வேட்கைக் கொள்கிறார் குலசேகராழ்வார். அதற்காக உடன்பிறவிகளையும், செல்வங்களையும், அரசு காரியங்களும், மேலுலகத்தில் வாழும் உருப்சியும் மேனகையும் ஆடும் ஆடலும், பாடலும் இன்னும் பிற ஆசைகளையும் வெறுத்தால் இத்தகைய பிறவியை அடையலாம் என்ற நம்பிக்கையோடு துறப்பதை இதனால் அறியலாம்.

பாற்கடலுள் பள்ளி கொள்ளும் மாயோனின் கழலிணைகளைப் பற்றுக் கோடாகக் கொண்டு பாடுவதை விரும்புகிறார். தன் வாழ்வும், உடலும், உயிரும் மாயோனுக்கே என்று வாழ்கிறார். அதனை,

"கேசவனையே செவிகள் கேட்க! திருவரங்கத்து
ஈசனையே சென்னை இறைஞ்சிருக்க! நேசமுடன்
கண்ணனையே காண்க இரு கண்ணினைகள்–காயாம்பூ
வண்ணனையே வாழ்த்துக என்வாய்"

என்பதால் தன் உடல் உறுப்புகள் அனைத்தும் வேங்கடத்தானுக்கே எனக் கூறியுள்ள பக்தி உணர்வை இதனால் அறியமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் உள்ள பதிற்றுப்பத்தில் ஒவ்வொரு பாடலின் சிறப்புகளைப் பற்றிக் கூறும் தொடர்களைக் கொண்டு, துணைத் தலைப்பாகக் கூறியுள்ளது போன்று, குலசேகரர் பாடிய பத்து பதிகங்களிலும் இருளிரியச் சுடர், தேட்டு அருந்தேறல், மெய்யில் வாழ்க்கை, ஊனேறு செல்வம், தருதுயரம் தடாயெல், ஏர்மலர்ப் பூங்குழல், ஆலைநீள் கரும்பு, மன்னுபுகழ், வன்தாளி ன் இணை, அங்கன் நெடுமதில், என்று முதல் அடிகளைக் கல்வெட்டுகளில் முதற்குலோத்துங்க சோழனின் ஆட்சி காலத்தில் பதினைந்தாம் ஆண்டில் கூறியுள்ளதை அறியலாம்.

திருவேங்கட மலையில் எப்பிறப்பேனும் எய்த அருள்வாய் என்று வேண்டும் பாங்கை அறியலாம். இப்பதிகங்களைப் படிப்பவரில் மாணிக்கவாசகரின் திருவாசகத்தைப் படித்தவர்கள் பக்தியால் மனம் நெகிழ்வதை நற்கருப்பஞ்சாற்றினிலே தேன் கலந்து பால்கலந்து ஊன்கலந்து உயிர்கலந்து உவக்காமல் இனிப்பதுவே என்று இராமலிங்க அடிகளார் கூறுவதிற்கேற்ப, குலசேகரனின் பதிகங்கள் அமைந்துள்ளதை பக்தியின் பால் உள்ள மக்களினம் அறியும் என்பதை இதன்மூலம் அறியலாம். வைணவ அடியார்களில் குலசேகரர் தனிப்பெரும் சிறப்பைப் பெற்றுள்ளதையும் இவைகள் வாயிலாக அறியலாம்.

# 9. உவமையால் அறியும் பக்தி

தமிழ்மொழியை மேம்படுத்துவது உவமை ஒருபொளை மற்றொரு பொருளோடு ஒப்புமைப்படுத்தி கூறுவதாகும் அணிகளுககெல்லாம் தாய் அணியாக அமைவது உவமையணி தமிழ் செய்யுள்களை இடத்திற்கேற்ப, ஒப்புமைபடுத்துவது தமிழ்க் கவிஞர்களின் தனிச் சிறப்பாக விளங்குகின்றது உவமையின் சிறப்புகளாகத் தொல்காப்பியர் தனி இயலாகப் பகுத்துக் காட்டுகிறார் அதனை,

"வினைப்பயன் மெய் உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமைத் தோற்றம்"

என்பதால், உவமைகளை நான்கு பிரிவில் வகைப்படுத்தலாம் என்பதை அறியலாம் இதனை சிறப்புப் பொருளாகவும், நலனுடையதாகவும், காதலையும், வலிமைகளையும் கொண்டு உயர்ந்தப் பொருள் உவமைத்தோன்றும் நிலைகளன்களாகச கூறுவர் தொல்காப்பியர். உயர்ந்தப் பொருள்களை மட்டுமின்றி தாழ்ந்தப் பொருளிலும் உவமைத் தோன்றும் என்றும் கூறியுள்ளனர்

பிற்காலத்தில் தண்டியாசிரியர் இதனை, இருபத்தி நான்கு வகையாகப் பிரித்துக் காட்டுவர் அவர்,

"பண்பும் தொழிலும் பயனும் என்றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளோடு பொருள் புணரப்
ஒப்புமைத் தோன்ற செப்புவது உவமை"

என்று கூறுவதை அறியலாம் தமிழில் தோன்றிய முதல் இலக்கணம் தொல்காப்பியம் முதல் தற்காலத் தமிழ் நூல்கள், கவிதை, கட்டுரை போன்றன வரை உவமைகளால் மிகைப்படுகிறது பெரும்பாலும் பக்தி இலக்கியங்களில் பரம்பொருளாகிய இறைவனைப் புகழ்ந்து கூறும் அடியவர்கள் உவமை நயங்களை இடத்திற்கேற்ப் இயற்கை வனப்போடு படைத்து காட்டுவது இயல்பு பெருமானின் திருமுடிக்குத் தீந்தழலையும், காயாம் பூவையும் ஒப்புமைபடுத்துவர் கிடைப்பதற்கரியதான காயாம்பூவை இறைவன் சூடுதலையும், அவை செந்தழல் போன்றும் அமைந்துள்ளதை நிறவுவமையாகக் கொள்ளலாம் திருமாலின் பவளவாயை மிகைப்படுத்துகிறார் குலசேகரர் தேவர் குலத்துக்குத் தலைவனா கவும், கீழுலகத்தில் ஆயர்குலத் தலைவனாகவும் விளங்கும் சொல் காவலனை,

"செம்பவள வாயான் திருவேங்கடம் என்னும்
எம்பெருமான் பொன் மலைமேல் ஏதேனும் ஆவனே"

என்ற அடிகளால் உள்ளுறை உவமையாகப் பவளம் போன்ற வாயுடைய வேங்கடவனைக் கூறியுள்ளார் அத்தகைய பெருமானிடம் எந்த உருவமாகத் தோன்றினாலும் அதனைச் சிறப்பாகக் கருதும் பாங்கை இதனால் அறியலாம்.

## குலசேகரர் காட்டும் உவமைப் பதிகம்

ஆழ்வார்களில் பக்தி பனுவலால் இறைவனிடம் திருவேங்கடத்தில் முதற்படியாகக் குடிக்கொண்டவர். அரங்கனைப் பற்றிய புகழையும், திருத்தலங்களையும், தான் பெரும் பிறவிகளைக் கூறியதோடு மட்டுமின்றி, உவமை நயங்களால் பக்தியை வெளிப்படுத்துகிறார். வித்துவக் கோட்டு அம்மானை பல பொருள்களால் பாடிப் பரவசப்படுகிறார். திருவித்துவக் கோடு என்பது மலைநாட்டுத் திருப்பதிகளில் ஒன்றாகும். திருவிற்றுவக்கோடு, திருமிற்றக் கோடு என்றும் அத்தலத்தை அழைப்பர். கேரளத்துப் பாலக்காட்டில் பட்டாம்பி என்னும் நகருக்கு அருகில் அத்தலம் அமைகிறது. இருப்பினும் "இதனை கொங்கு நாட்டுக் கருவூரை அடுத்துள்ள திவ்ய தேசம் என்பர் மு.ராகவையங்கார்" அத்தலத்தில் வித்துவக் கோட்டம்மானாகிய திருமால் இருந்த கோலத்தில் காட்சி தருகிறார். எம்பெருமானையின்றி, வேறு புகழிடம் கிடைக்காது என்று அறிந்த குலசேகரர் உவமைகளால் திவ்ய தேசத்து இறைவனைப் பற்றுக் கொள்கிறார் எனலாம்.

உலகில் தாய்ப்பாசம் தனிச்சிறப்புக் கொண்டது. தம்பிள்ளைகள் எத்தகைய தவறுகள் செய்தாலும், பொறுத்தருளும் பாங்கு தாய்களுக்கே உண்டு. தாயுள்ளம் போன்ற இறைவன் தனக்கு அருள் காட்டாவிடினும் அவனையை நினைத்திருக்கிறார்.

"அரிசினத்தால் ஈன்ற தாய்அகற்றிடினும் மற்று அவர்தன்
அருள் நினைந்தே அழும் குழவி; அதுபோன்று இருந்தேனே"

பெற்ற தாய் சினம் கொண்டு தன் பிள்ளையை வெறுத்து ஒதுக்கினாலும், அப்பிள்ளை தாயைப் பார்த்தே அழும். அந்நிலையைக் கண்ட தனக்கு எவ்வளவு துன்பமாயினும் மறந்து தம்பிள்ளையை அரவணைத்துக் கொஞ்சுவர். அதனால்தான் 'பெற்ற மனம் பித்து பிள்ளை மனம் கல்லு' என்ற பழமொழிக்கேற்ப இறைவனைத் தன் தாயாக உவமைப்படுத்திக் கூறியுள்ளதை அறியலாம்.

வித்துவக் கோட்டு அம்மானைக் குலமகளாகவும், தன்னைக் காதலனாகவும் நினைத்து நாயகன் நாயகி நிலையில் பாடுகிறார்.

"கண்டார் இகழ்வனவே காதலன் தான் செய்திடினும்
கொண்டானை அல்லால் அறியாக் குலமகள் போல்"

என்று கூறுவதால், சங்க அக இலக்கியங்களில் மருத நில ஆண்கள் பரத்தையர் பிரிவு என்ற முறையைப் பின்பற்றியுள்ளனர். அவ்வாண்களின் தீய செயல்களைத் தாங்கிக் கொண்டு தன் கணவனை ஊடியும், கூடியும் மகிழ்வர். அச்சூழலில் தன் இல்லச் சிறப்புகளையும், கடமையுணர்வுகளையும் செய்து அக்குடியை வளர்ப்பர். அத்தகைய நோக்கோடு தன் பாவங்களை மன்னித்து அருள்வான் என்கிறார் குலசேகர். அதனை,

என்று நாயகன் நாயகி பாவனையில் பாடும் திறனைக் குலசேகரரின் பக்தி நிலையோடு ஒப்பிட்டு அறியலாம்.

## கோல் நோக்கி வாழும் குடி

சங்க காலத்தில் மண்ணாளும் அரசரும், குறுநில மன்னர்களும் தன் நாட்டை உயிராகக் கருதினர். நாட்டு மக்களின் துயரைப் போக்கும் வண்ணம் ஆட்சி புரிந்தனர். அதனை,

"யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய"

என்றார் குலமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன். தான் வாழும் ஒவ்வொரு நாளும் நாட்டுக்காகவும், நாட்டு மக்களுக்காகவும் வாழ்கிறேன் என்பதுபோல் நாட்டு மக்களும் அத்தகைய அரசரை நம்பி வாழ்ந்தனர். மனிதர்கள் உயிர்வாழ்வதற்கு முக்கியமானது நீரும், உணவும் ஆகும். அதைக்காட்டிலும் அந்நாட்டு அரசனையே நம்பினர் என்றால் அந்நாட்டை ஆளும் அரசன் எத்தகைய குணநலன்களைக் கொண்டிருந்தான் என்பதை அறியலாம்.

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னர் உயிர்த்தே இம்மலர் தலையுலகம்"

என்று வாழ்ந்தனர். குறைவில்லாத விளைப்பொருளும், தக்க அறிஞர்களும், கேடில்லாத செல்வமும் நிறைந்துள்ளது நாடாக்குவர்.

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு"

என்கிறார்.

அத்தகைய நாட்டை ஆட்சி செய்பவனைத் தெய்வமாக நினைத்தனர் என்பதை முற்காலங்களில் அறியலாம். அத்தகைய சிறப்பு வாய்ந்து "மீன்கள் உலவும் வயல் சூழ்ந்த வித்துவக் கோட்டம் மா!" என்மீது நோக்கம் இல்லாயினும், உன்னைவிட்டு வேறொருவரைப் பற்ற மாட்டேன். அரசன் தானே குடிகளைக் காக்காமல் துயர் செய்தாலும், செங்கோலை நோக்கியே மக்கள் வாழ்வர் என்கிறார். அதனை,

"தான் நோக்காது எத்துயரம் செய்திடினும் தார்–வேந்தன்
கோல்நோக்கி வாழும் குடி போன்று இருந்தேனே"

என்று கூறுவதால் நாட்டு மக்கள் அரசனை நம்பி வாழும் ஒழுக்க முறைகளையும், மக்களுக்காக அரசு புரியும் வேந்தனின் பண்பு நலன்களையும் உவமை நயம்பட கூறியுள்ள பாங்கை இதன்மூலம் அறியலாம். குலசேகரர் கூறும் ஆட்சிமுறைகளையும் இதனால் அறியலாம்.

## இறைவனை மருத்தவனாக்கல்

மக்களினம் நோயின்றி வாழ்வதே சிறந்தச் செல்வம். பிற சூழ்நிலைகளால் நோயால் அவதிப்படும் மக்கள் ஏராளம். அவர்களின் நோய்களை முகமலர்ச்சியோடு பார்த்துத் தக்க மருந்தளிப்பவன். கத்தியால் கட்டியை அறுத்து நெருப்பால் சுட்டாலும் அம் மருத்தவன் மீது அன்பு காட்டுவர். அந்நிலையில் குலசேகரர் பட்ட பக்திவேட்கை நோயால், வித்துவக் கோட்டம்மான் மருந்து

அளிப்பான் என்கிறார். அதனை,

"வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்
மாளாத காதல் நோயாளன் போல்"

பல துன்பங்களைத் தரினும் வேறொருவரைப் பற்றி நினைத்து வாழமாட்டேன் என்று கூறும் பாங்கை அறியும் போது, குலசேகராழ்வார் பக்திவேட்கையின் மிகுதி பாட்டால் தன்னை நோயாளியாகவும் இறைவன் அதனை நீக்கும் மருத்துவனாகவும் கையாளும் பக்தி பாசுரத்தை உவமை நயம்பட அறியலாம்.

வித்துவ கோட்டம்மானைப் பற்றுக் கோடாகக் கொண்டு நடுகடலில் பாய்மரத்திலிருந்து பறந்து சென்று, கரை காணாமல் மீண்டும் அம்மரத்தின் மீது அமரும் பறவையாகவும், நினைத்து உவமையால் பக்தியின் மிகுதிப் பாட்டை வெளிப்படுத்துகிறார்.

## மழைபார்க்கும் பயிர்கள்

உலகம் செழுப்புற்று வாழ வான்மழை முக்கியமாகிறது. ஓரறிவுக் கொண்ட புல் பூண்டு முதல் ஆறறிவு கொண்ட மக்கள் வரை வாழவைப்பது நீர். அதனை 'நீரின்றி அமையாது உலகு' என்றார் வள்ளுவர். பயிர்கள் மழையின்றி, தலைசோர்ந்து வாடிக்கிடப்பதைக் கண்ட மாமனிதர்,

"வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்"

என்றார். அத்தகைய இரக்கத்தோடு வித்துவக் கோட்டம்மான் என்னை ஏற்றுக் கொள்வான் என்கிறார் குலசேகரர். அதனை,

"எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங் கூழ்கள்
மைத்து எழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் மற்றவை போல்"[30]

என்பதால் கார்மேக நிறம் கொண்ட கார்வண்ணன் தண் என்ற குளிர்ச்சி பொருந்திய அருளை வழங்குபவன் என்ற வேட்கையை மனதில் கொண்டு தன்னை ஓரறிவு உயிராக நினைத்துப் பாடியுள்ளார் என்பதை அறியலாம். மேலும் வான் மழையின் சிறப்புகளைத் தனி அதிகாரமாக வள்ளுவர் படைத்துக் காட்டுவதையும், வள்ளலார் போற்றுவதையும்,

"விசும்பின் துளிவிழின் அல்லால் மற்று ஆங்கே
பசும்புல் தலை காண்பு அரிது"

என்ற வள்ளுவரின் வாக்கிற்கேற்ப, குலசேகராழ்வார் பாடிய உவமையை ஒப்பிட்டு அறியலாம். மேலும் குலசேகராழ்வார் வித்துவக் கோட்டம்மானை விரும்பி, செல்வத்தை விரும்பாதவனிடத்தில் சேரவிரும்பும் செல்வம் போன்று இறைவனையே பற்றிக் கொள்கிறார்.

"நின்னையே தான் வேண்டி நீள் செல்வம் வேண்டாதான்
தன்னையே தான் வேண்டும் செல்வம்போல், மாயத்தால்
மின்னையே சேர்திகிரி வித்துவகோட்டு அம்மானே!

நின்னையே தான் வேண்டி நிற்பன் அடியேனே''

என்பதால் மாயவன் குலசேகரருக்கு எவ்வளவுதான் துன்பம் தந்தாலும் அன்பால் அணைத்துக் கொள்வதற்கே என்று நினைக்கிறார். ''கோபமுள்ள இடத்தே குணமும் இருக்கும்'' என்ற பழமொழிக்கேற்ப, குலசேகரரின் பாடலடிகளில், இறைவன்பால் உவமை நயங்கள் நிறைந்துள்ளதை அறியலாம்.

இரண்டாவது இயலில் பெருமாள் திருமொழியின் சொல்விளக்கம், திருமாலைக் காண முற்படும் உத்திகள், தன்னைத் தாழ்த்தி பாசுரத்தை உயர்த்தும் பாங்கும், அரசாட்சியைத் துறந்து மனசாட்சியைக் காணும் நிலை போன்றவற்றைத் தொகுத்து ஆராயப்பட்டுள்ளது. இறைவனை மருத்துவனா கவும், மழையாகவும் காணும் பாங்கு இராமாயணக் கதைகளைச் சுருக்கிக் கூறும் பாங்கு போன்றவையும் பெருமாள் திருமொழி கம்பருக்குத் துணையாக இருந்த பாங்கினையும் காணமுடிகின்றது.

# 10. குலசேகரர் காட்டும் சிற்றிலக்கியம்

'குலசேகரர் காட்டும் சிற்றிலக்கியம்' என்ற மூன்றாவது இயலில் சிற்றிலக்கியம் என்பது என்ன, அவற்றில் குலசேகரர் பின்பற்றும் சிற்றிலக்கியம் போன்ற ஆராயப்பட்டுள்ளன. அவர் காட்டும் பிள்ளைத்தமிழ், தாலாட்டு, தாயுள்ளம், தேவகியின் அவலநிலை, தாயின் போராட்டம், வாரானைப்பருவத்தில் கண்ணன், போன்ற தலைப்புகளில் ஆராய்ந்து கூறப்பட்டுள்ளன. மேலும், உலா காணும் கண்ணன், நாயகன் நாயகி முறையில் கையாளும் பாங்கு, கோபியர் பெண்களின் குற்றச்சாட்டு, குழல் ஓசைக் கேட்க முனைதல், போன்ற நிலைகளில் பகுத்தும் தொகுத்தும் ஆராயப்பட்டுள்ளன.

இறைவனின் அருள்திறமும் அதனை அடைய முற்படும் அடியவர்களின் மார்க்கங்களையும் இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இறைவன் உருவ நலனாலும், பேரருள் திறனும் பாடிப் பரவசமுற்றவர்கள் ஆழ்வார்களும், நாயன்மார்களும் ஆவர். அவர்கள் பாடிய பக்தி உணர்வுகளை மக்களுக்கு மந்திரம், விபூதி, கோயில் வழிபாடு, ஆசாரம் பற்றிய கருத்துகளை உணர்த்தினர். பூஜை, பஜனை, ஆராதனை, சடங்குகள் மட்டுமின்றி, இறைவனிடம் அளவு கடந்த அன்பினை உள்ளத்தில் கொண்டு வெளிப்படுத்தினர். அவை உலக மக்கள் பால் ஒருவன் காட்டும் அன்பினின்றும் கடவுள் பால் கொண்ட அன்பினைப் பிரித்துக் காட்டுவதற்கே பக்தி என்ற சொல் பயன்படுகிறது எனலாம். அவ்வாறு தெய்வநெறியில் அடியவர்கள் ஆண்டவனை நினைத்து நினைத்து உருகும் அன்பின் திருக்காட்சியே பக்தி என்பதை இதன்மூலம் அறியலாம்.

மக்கள் இனம் சிந்திக்க தொடங்கிய காலம் முதல் கடவுள் பால் பக்திக் கொண்டுள்ளனர். அதனை,

"அழிவில் முயலும் ஆர்வ மாக்கள்
வழிபடு தெய்வம் கண்கண்டாங்கு"

என்று பல இலக்கியங்களில் அறியலாம். பின்னர் ஆழ்வார்களும், நாயன்மார்களும் தம்மை இறைவனுக்கு அர்ப்பணித்தனர் என்பதை அவரது பாசுரங்களில் காணலாம்.

"ஆர்வம் என்பதோர் கோயில் அமைத்து
மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி
ஆர்வம் என்பதோர் பூ இடவல்லார்க்கு
அரவ தண்டத்தில் உய்யலும் ஆமே"

என்கிறார் பிற்காலங்களில் பல தனி அடியார்கள் தோன்றி பக்தி பாசுரங்களை வெளிப்படுத்தினர். சிற்றிலக்கியங்களும், தற்கால இலக்கியங்களும் இறைவனைப் பாடு பொருளாகக் கொண்டு தோன்றியுள்ளன.

### பிள்ளைத்தமிழ்

தொன்னூற்றாறு வகை சிற்றிலக்கியங்களில் பிள்ளைத்தமிழ் சிறப்புப் பெற்றது. மக்களினத்தின் மரபுகளை நினைவு படுத்தும் வண்ணம் பிள்ளைப்பேறு

பெருமிதப்படுகிறது. அதனைப் பத்துப் பருவங்களில் பாடி மகிழ்வர். பிள்ளைத்தமிழக்கு வித்திட்டவர்கள் பலராவர். அவர்களுள் பெரியாழ்வார் கண்ணனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு அவன் மீது கொண்ட பக்தி நெறியால்,

"மாணிக்கம் கட்டி வயிரம் இடைக்கட்டி
ஆணிப் பொன்னால் செய்த வண்ணச் சிறு தொட்டில்"

என்று தாலாட்டுகிறார். நம்மாழ்வாரும் பிள்ளையின் தனிச் சிறப்பாகக் கண்ணனைச் சிறு குழந்தையாகப் பாவித்துப் பாடுகிறார். பிள்ளைச் செல்வம் மக்கள் சேர்க்கும் செல்வங்களில் முதலிடம் பெறுகிறது.

"வேத ஒலியும் விழா ஒலியும்
பிள்ளைக் குழா விளையாட்டு ஒலியுமாறா"

என்று பாராட்டுவதால் பிள்ளைத் தமிழைத் தம் பக்தியின் மேல் கொண்டு பாடியுள்ள பாங்கினை அறியலாம். அதனைத் தான் தெய்வ புலவர் குழல் இனிது யாழ் இனிது என்னும் மக்கள் மழலைச் சொல் கேளாதவர் என்கிறார். அறிவுடை நம்பி என்னும் அரசன் குழந்தைச் செல்வத்தை,

"படைப்பு பல படைத்து பலரோடு உண்ணும்
உடைப்படு செல்வராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி

என்று பாடியுள்ளதை அறியலாம். எனவே மக்களினத்திற்குக் குழந்தைச் செல்வம் இன்றியமையாததும் தெய்வமாக நினைத்து மகிழும் பாங்கையும் உணரும் போது 'குழந்தையும் தெய்வமும் ஒன்று' என்ற வாக்கிற்கேற்ப மக்கள் பின்பற்றினர். அவ்வன்பின்மிகுதியைக் கடவுளிடம் சிறு குழந்தையாக நினைத்துக் கொண்டு தாலாட்டுப் பாடியதை அறியலாம். இத்தகைய இலக்கிய வளர்ச்சியை இராமன் பால் கொண்டு குலசேகரர் பாடும் பாங்கும் அறியத்தகும்.

# 11. குலசேகரர் காட்டும் தாலாட்டு

பிள்ளைகளைத் தாலாட்டு பாடி கண் வளர வைப்பது மரபு. அதனைத் துணையாகக் கொண்டு தன் மகனைத் தாலாட்டும் தாயாகவும் இராமனைப் பாடியுள்ளார். அவரது எட்டாம் பதிகத்தில் உள்ள பாசுரங்கள் இராம பிரானுக்குத் தாயான கோசலைப் பாடும் தாலாட்டாக அமைத்துள்ளார். அதனை,

"மன்னு புகழ் கௌசலை தன் மணிவயிறு வாய்த்தவனே
தென்னிலங்கைக் கோன் முடிகள் சிந்துவித்தாய் செம்பொன்சேர்
கன்னி நன் மாமதில் புடைசூழ் கணபுரத்து என் கருமணியே
என்னுடைய இன்னமுதே இராகவனே தாலேலோ"

என்று இராமபிரானின் வீரத்தையும், நீதிநெறிகளையும் தாலாட்டாகப் பாடி மகிழ்வதை அறியலாம்.

இதில் தாயன்பு தோன்ற ஆழ்வாரின் தாலாட்டுத் துவங்குகிறது. இவ்வாறு ராமனுக்குத் தாலாட்டு பாடும்பொழுது திருகண்ணபுரத்து திருமாலையே இராமனாகத் தொட்டிலிட்டுப் பாடி மகிழ்கிறார். இதில் கௌலையைப்போல் உன்னிடம் மகிழ்ச்சிக் கொள்ளவில்லை என்ற உள்ளுணர்வோடு பாடியுள்ளார். அவ்வேக்கத்தை நிறைவு செய்வதற்காகத்தான் இப்பதிகம் பாடியுள்ளார் என்பதை இதன்முலம் அறியலாம். இத்தாலாட்டில் தாடகையைக் கொன்றது, சனகன் திருமகளாகிய மைதிலியின் மணவாளனாக இருந்தது, சிற்றன்னை தன் சொல்லைக் கொண்டு அன்பு இளையவனோடு சுற்றமெல்லாம் பின் தொடரக் கானகம் சென்றது போன்றனவற்றைப் பதித்துக் காட்டுவதைக் காணலாம். அயோத்தியை ஆளும் பொறுப்பினைத் தன் சகோதரன் பரதனுக்கே அளித்த பாங்கையும், கூறும்போது இராமபிரான் குலசேகரனைப் போல் ஆட்சி புரிய விரும்பவில்லை. நிலயாமைக் கருத்துகளை நன்குணர்ந்து சொல் காத்தப் பெருமை குலசேகரரின் உள்ளத்தைப் பற்றியது எனலாம். அதனை,

"பார் ஆளும் படர் செல்வம் பரத நம்பியை அருளி
ஆரா அன்பு இளைவனோடு அருங்கானம் அடைந்தவனே
சிர் ஆளும் வன மார்பா! திருக் கண்ணபுரத்து அரசே
தார் ஆளும் நீள்முடி என் தாசாரதி! தாலேலோ"

என்ற அடிகளால் இராமனின் துறவு வாழ்வையே பெரிதும் குலசேகரர் நம்பி பாடியுள்ளார் என்பதை அறியலாம். அயோத்தியை ஆட்சி புரியும் எண்ணத்தைக் கைவிட்டு, கானகமே நாட்டரசாகக் கொள்ளும் பாங்கு மனிதரிடத்தில் இல்லை. உடன் பிறப்புகளாலும் உறுதுயரம் அடையும் நிலையை மக்களிடம் காணலாம். அத்தகைய தியாக உணர்வு கொண்டு அன்று அலர்ந்த செந்தாமரை முகனாகக் கானகத்தை ஏற்றுக் கொண்டான்.

மக்களினத்திற்கு துன்பம் வருவதைத் தாங்கி, அதனை மன மகிழ்வோடு ஏற்றுக் கொண்டால், துன்பமும் துன்பப்பட்டுவிடும் என்பதை முன் மாதிரியாகக் கொண்டு நடந்து காட்டியுள்ளார் இராமபிரான். எனவே குலசேகரர் காட்டும் இராமன் மக்களினத்திற்கு மருந்தாக அமைவதை உணரலாம். ஆலிலையில்

குழந்தை வடிவமாக உலகைஅழித்த சகத்ரட்சகனாகவும், வாலியை அறிந்து சுக்கிரிவனுக்கு அரசு பொறுப்பைத் தந்த நீதியாளனாகவும் கூறியுள்ளார். சகோதர பாசத்தை உலகினுக்கு நிலை நிறுத்தியவன் இராமன் என்பதை வாலி சுக்கிரவன் மூலம் படைத்துள்ளார். அதனை,

"ஆலின் இலைப் பாலகனாய் அன்று உலகம் உண்டவனே!
வாலியைக் கொன்று அரசு இளைய வானரத்துக்கு அளித்தவனே
காலின் மணிகரை அலைக்கும் கணபுரத்து என் கருமணியே"

என்று தன் மகனைக் கண்ணிக் கருமணிப் போல காத்து நிற்கும் கௌசலையாகப் பாடும் திறம் போற்றத்தக்கது. மனித இனத்துக்கு இன்றியமையாதது கண்கள். ஒரு கண்ணில் நீர்வழிந்தால், மறு கண்ணில் உதிரம் கொட்டுதடி என்ற திரைப்பட பாடலுக்கேற்ப, இராமபிரானின் ஒரு கண்ணைக் கொண்டு மற்றொரு கண்ணாகக் குலசேகராழ்வார் உருகுகிறார். மேலும்,

"மலையதனால் அணைக்கட்டி மதில் இலங்கைஅழித்தவனே
அலை கடலைக் கடைந்து அமரருக்கு அமுது அருளிச் செய்தவனே
கலை வலவர் தாம் வாழும் கணபுரத்து கருமணியே
சிலைவலவா சேவகனே சீராமா தாலேலோ" என்றும்,

"தளை அவிழும் நறுங்குஞ்சித் தயரதன்தன் குலமதலாய்
வளைய ஏழு சிலையதனால் மதில் இலங்கை அழித்தவனே
களைகழுநீர் மருங்கு அலரும் கணபுரத்து என் கருமணியே
இறையவர்கட்கு அருள் உடையாய் இராகவனே தாலேலோ"

என்பதால், மலையதனால் அணைகட்டி மதில் இலங்கை அழிந்தது, தென்னிலங்கைக் கோன் முடிகள் சிந்துவித்ததுப் போன்ற அருஞ்செயல்களைக் கூறி, இராமபிரானை உறங்க வைப்பது குலசேகரரின் ஆவலாக இப்பதிகத்தில் இடம்பிடித்தார். எம்மக்களுக்கும் எளிய முறையில் பாடி, அனைவரும் புரியும் வண்ணம் சொல்லாட்சி முறைகளைக் கையாண்டுள்ளதை அறியலாம்.

இராமாயண நிகழ்ச்சிகளோடு தாமரை மலர் மீது அயனைப் படைத்து,அவன் மூலம் உலகங்களை உண்டாக்கிறது, ஆலின் இலை பாலகனால் அன்றுலகம் உண்டது, அலைகடலைக் கடைந்து அமரருக்கு அமுது தந்து காத்தது, போன்ற புராண நிகழ்வுகளைத் திருமாலின்பால் படைத்துக் காட்டுகிறார்.

ஆண்கள் வீரமிக்கவர்களாக விளங்கினர் என்பதைப் பற்றிப் புற இலக்கியங்கள் கூறும். ஒவ்வொரு "ஆடவர்களும் வினையே ஆடவர்க்கு உயிரே" என்று குறுந்தொகை உணர்த்தும். பொருள் தேடவோ, போர்புரியவோ, தூது செல்லவோ பிரியும் வழக்கம் ஆண்களுக்கு உண்டு. போர்புரிந்து மீண்டுவந்த ஆண்களைப் பெண்கள் போற்றினர். ஆரமுது படைத்து மகிழ்ந்தனர். திருமால் பத்து அவதாரங்களைக் கொண்டு அசுரர்களையும் வாலி, இராவணன் போன்ற பேரரசர்களையும் வென்று, பாம்பணையில் பள்ளி கொள்ள வைக்கும் குலசேகரரின் தாலாட்டுப் போற்றுதற்குரியது. தம் பிள்ளைகளுக்கு வீரத்தையும், உணவை ஊட்டியும் தாலாட்டுப்பாடும் தாய்மார்களைப் போல, இராமன்

வீரத்தையும், அன்பையும் துணையாகக் கொண்டு படைத்துள்ளது இதன்மூலம் அறிய முடிகிறது.

### தாயுள்ளம்

பெண்களின் பெருமை பிள்ளைப் பேறே எனலாம். பிள்ளையைப் பெற்றதனால் தாய் ஆனாள். தாய்மையின் உணர்வுகள் பிள்ளையின் விலை மதிக்கமுடியாத மாணிக்கங்கள், தம் பிள்ளைகள் குழந்தைப் பருவத்தில் செய்யும் குறும்புகளும், மழலை மொழிகளும் தாய்களின் துன்பத்தைப் போக்கும் மருந்துகள் எனலாம். பிள்ளைப்பேறு இல்லாத பெண்கள் தன் வீட்டிற்கும், சுற்றத்தார்க்கும், ஊராருக்கும் அஞ்சி வருந்துவர்.

அத்தகைய அவல நிலைகள் நாட்டுப் புறங்களில் புதைந்து கிடக்கின்றன. பெண்கள் பிள்ளைப்பேறு இல்லாத நிலையையும், பல ஆண்கள் கழித்து தாம் பெற்ற பிள்ளைகளைத் தாலாட்டுவதிலும், அவர்களின் துன்பங்களை வெளிப்படுத்தும். அதனை, தவமாய் தவமிருந்து உன்னைப் பெற்றேன்; என்னை உற்றார் உறவினர்கள் பேசினாங்கா, நாத்தனார் பேசினாங்க, மாமியார் பேசினாங்க. உன்னைப் பெற்ற நாளிலே ஊர்வாய் அடைச்சிடுச்சு என்று ந. வானமாமலை, அன்னகாமு, ஆறு, அழகப்பன், சண்முக சுந்தரம் போன்ற நாட்டுப்புற ஆசிரியர்கள் வெளிப்படுத்தினர். ஆனால் தேவகியோ தன் பிள்ளையைப் பெற்றும், பெறாதவள் போல் துன்புற்றுக் கூறுவதை அறியலாம்.

### தேவகியின் அவலம்

மக்கள் மகிழ்ச்சியோடு இருப்பதையே விரும்புவர். துன்பம் வந்தபோது, மகிழ்ச்சியை இழக்கின்றனர். அச்சூழலை அறிந்துதான் "இடுக்கண் வருங்கால் நகுக" என்றார் வள்ளுவர். அவலத்தைப் பற்றி முதல் இலக்கணமான தொல்காப்பியம் கூறுகிறது. அதனை,

> "இழிவே இழவே அசைவே வறுமையென
> விளிவில் கொள்கை அழுகை நான்கே"

என்று வகுத்துள்ளார். தேவகியின் புலம்பலோ தன் மகனைத் தானே வளர்த்து, மழலையுரைக் கேட்டு, மிச்சில் உணவு உண்டு மகிழாத ஏக்கமாகவே அமைகிறது. அவளது உள்ளம் தன் மகனை வளர்க்கமுடியாத ஊராரின் பழிச் சொல்லால் இழிவுபடுகிறாள்; மழலை செயல்களைக் காணாமல் இழக்கப் படுகிறார். பெத்த மனம் பித்துவாகத் தளர்வடைகிறாள்; அறிவுடை நம்பி கூறுவதற்கேற்ப, பிள்ளைச் செல்வம் இல்லாத செல்வம் பயனில்லை என வறுமைப்படுகிறாள்.

இத்தகைய நான்கு உணர்வுகளிலும் தேவகி படும் துன்பத்தைத் தூண்டிவிடுகிறார் குலசேகராழ்வார். வாசுதேவருக்கும் தேவகிக்கும் மகனாகப் பிறந்த கிருஷ்ணன், நந்த கோபனிடம் ஆய்பாடியில் வளர்கிறான். தன் தாய் மாமன் கம்சனுக்கு அஞ்சி, அவனைப் பெற்ற மறுகணமே பிரிந்தாள் தேவகி. அசோதையோ அவனைத் தான் பெற்ற பிள்ளையாகப் பாராட்டிச் சீராட்சி

வளர்க்கும் தவத்தைப் பெற்றாள். பிள்ளை வளரும் காட்சிகளையும், செயல்களையும் கண்டு அனுபவிக்கிறாள் அசோதை, தேவகியோ அச்செயல்பாடுகள் அனைத்தையும் இழந்தவள் ஆனாள். கம்சவதத்திற்குப் பின் கண்ணன் தன் தாயைக் கண்ட பொழுது, தேவகி மகிழ்ச்சிக் கொள்ளவில்லை. அவனது 'குழந்தைத் திருவிளையாடல்களைக் காணாமல் இழந்தோமே' என்னும் ஏக்கமே மிகுந்திருந்தது. தாய் நிலையில் கடை நிலையாகத் தன்னை நினைத்துப் புலம்புவதாகக் குலசேகராழ்வார் குறிப்பிடுகிறார்.

"ஆலை நீள் கரும்பு அன்னவன் தாலோ
அம்புயத் தடங் கண்ணினன் தாலோ
வேலை நீர் நீறத்து அன்னவன் தாலோ
வேழப்போதகம் அன்னவன் தாலோ
என்று என்று உன்னை என் வாயிடை நிறையத்
தால் ஒலித்திடும் திருவினை இல்லாத்
தாயாரிற் கடை ஆயின தாயே"

என்ற பாசுரத்தால் தம்பிள்ளையைப் பெறாமல் இருப்பினும் வருத்தம் ஒரு நிலையாகிவிடும். பெற்றும் பெறாதவள்போல இருக்கும் துன்பத்தினை மிகுதிப்படுத்திக் காட்டுகிறார் என்பதை அறியலாம். கைக்கு எட்டியசோறு வாய்க்கு எட்டாத நிலைபோல, தேவகியின் துன்பத்தைக் கூறலாம்.

### தாயின் தர்க்கம்

விளையாட்டுப் பொருளைப் பார்த்துக் கொண்டு, தாமரை யொத்தக் கண்களும், உள்ளங்காலும், மழைச் சாரலைப் போல் சிரிய விரல்களும் கொண்டு நீ உறங்கும் அழகை, தொட்டிலில் கிடத்தித் 'தாலேலோ' என்ற நீலாம்பரி இசையை வாய்நிறைந்து பாடும் பாக்கியம் இல்லாத பாவியாகியவள் ஆவேன் என்கிறாள். நீரைப் பருகும் கன்றுபோல், நீ தொட்டிலில் தூங்கும் காட்சியைக் கண்டு களிக்காத பாவியானேன் என்கிறாள். தாயுள்ளம் கொண்டப் பெண்கள் உன்னை மடியில் அமர்த்தியும், கொஞ்சி விளையாடியும் தந்தை உமக்குயார் எனவினவ அழகிய மெல்விரலால் சுட்டிக் காட்டியும் கடைக்கண்ணால் பார்த்தும் நந்த கோபரை அடையாளம் காட்டினாய். யானும் என் கணவர் வாசுதேவரும் காணாத பாவிகளே என்கிறாள்.

கண்ணனைத் தாலாட்டும் வரத்தை அசோதைப் பெற்றாள் என்று முப்பது பாடல்களில் பெரியாழ்வார் பாடியுள்ளார். மேலும் திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார் போன்ற பிற ஆழ்வாரும் கிருஷ்ணக் கதையாகக் கூறியுள்ளனர். இருப்பினும் தேவகி நிலையில் நின்று குலசேகரர் பாடும் தாலாட்டு உணர்ச்சி மிக்கதாகவே அமைகிறது எனலாம். கண்ணுக்கு முன்னால் கம்சனால் கொல்லப்பட்டு ஏழு குழந்தைகளை அடுத்தடுத்து இழந்தவள் தேவகி. தன் மாமனின் கொடுமையை உணர்ந்து தாயின் கருவிலே சூழ்ச்சியோடு எட்டாவதாகப் பிறந்தவன் கண்ணன். கம்சனின் கண்ணில் படாது எங்கோ வளர கணவனும் சிறையில் துன்புற்றிருக்கும் தேவகியின் அவல உணர்வுகளைப் படம் பிடித்துக் காட்டுகிறார். பிறந்த குழந்தைகளை ஒன்றைக் கூட சீராட்டி பாலூட்டி

வளர்ககாத பாவியாகத தன் உணர்வைத் தாய்மூலம் வெளிப்படுத்தினார் என்பதை இதன்மூலம் அறியலாம்

"மருவும் திருநெற்றியில் சுட்டி
அசைதர மணிவாயின முத்தம்
தருதலும் உன்தன் தாதையைப் போலும்
வடிவு கண்டு கொண்டு உளளம் உள்குளிர
விரலைச் செஞ்சிறு வாயிடைச் சேர்த்து
வெகுளியாய் நின்றுரைக்கும் அவ்வுரையும்
திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம்
தெய்வ நங்கை யசோதை பெற்றாளே"

என்றப் பாசுரத்தால் தேவகியின் வாயால் அசோதையைப் பாராட்டியும், தன்னை இகழ்ந்தும் கூறும் பாங்கினை உணரலாம் அது மட்டுமின்றி, தாய் ஒருத்தியையன்றி, வேறொருவரையும் அறியாத குழந்தைப் பருவத்தை அனுபவிக்கப் பெறாமல் போனேனே! இனியும் என் உயிர் தாங்கியிருப்பது பயனில்லை எனத் தன்னையே நொந்துக் கூறும் அவல உணர்வினை அறியலாம்

## வாரானைப் பருவத்தில் கண்ணன்

கணணா உன் நெற்றிச் சுட்டி அசைய நீமுத்தம் கொடுப்பதை இழந்தேன், உன் தந்தையை போலும் வடிவழகு கண்டு உள்ளம் மகிழ்கையில், சீறறத்தோடு நீ கூறும் அமுதமாகிய மழலை மொழியை துறந்தேன் உனது திருவிளையாடல்களும், மழலைச் சொற்களும் அசோதையே பெற்றாள் என்ற ஏக்கததை உணர்த்துகிறாள்

"தண் அந்தாமரைக் கண்ணனே! கண்ணா!
தவழ்ந்து எழுந்து தளர்ந்தோர் நடையால்
மண்ணில் செம்பொடி ஆடி வந்து என்தன்
மார்வில் மன்னிடப் பெற்றிலேன், அந்தோ
வண்ணச் செஞ்சிறு கைவிரல் அணைத்தும்
வாரிவாய்க் கொண்ட அடிசிலின் மிச்சில்
உண்ணப் பெற்றிலேன், ஓ கொடுவினையேன்
என்னை என் செய்யப் பெற்றது எம்மோயே"

என்பதால், தன் தாய் பாசமும் அற்று ஏன் என்னைப் பெற்றால் என மனம் நொந்துக் கூறுவதை இதனால் அறியலாம், ஆயர்பாடியில் கண்ணன் கோபியர்களோடு கூடி விளையாடி, பால், வெண்ணெய் போன்றவற்றைக் களவு செய்து உண்டும் இடையர்களால் தாம்பு கயிற்றால் உம்மைப் பிணைத்துவிட்டு, அசோதையிடம் முறையிடும் பாங்கும் அறியாத பாவியானேன் அதனால் உன் அழுகையும், பயததால் பார்க்கும் உன் பார்வையும் உமது துடுப்பும், தொழுகையும் மன மகிழ்ந்து பார்த்த அசோதையைப் போன்று யான் கண்டுகளிக்காத பாவியானேன் என்கிறாள், மேலும் கோபியரோடு குரவை, குடக் கூத்துகளை ஆடிய கண்ணனின் அழகினை காணாத ஏங்குகிறாள் தேவகி அத்தகைய

பாக்கியத்தை அருள்வாயாக என்று கேட்கிறாள். குலசேகராழ்வாரைப் போல்தேவகியும் இறைவன் இடம் இறைஞ்சி கேட்கும் பாங்கை இதன்மூலம் அறியலாம். அசோதை தன் மகனைப் பற்றி ஆயர்குலப் பெண்கள் முறையீடு செய்ததைக் கண்டு, காட்டுக்குப் பசுக்கூட்டத்தை ஓட்டிச் செல்ல வைக்கிறாள். தன் மகனின் பாதம் நோகுமே என அஞ்சி கண்ணா வந்துவிடு, என வாயார அழைக்கும் பாங்கை தேவகி காணப்பெறவில்லை.

வட மதுரைத் தலைவன் கம்சனை வானுலகம் அனுப்பிவிட்டு மதுரையை அடைந்த தன் மகனின் செயல்களைக் காணத் துடிக்கிறாள்.

"வஞ்சம் மேவிய நெஞ்சுடைப் பேய்ச்சி
வரண்டு நார் நரம்பெடிக் கரிந்து உக்க
நஞ்சம் ஆர்தளு சுழிமுலை; அந்தோ
சுவைத்து நீ அருள் செய்து வளர்ந்தாய்
கஞ்சன் நாள் கவர் கருமுகில் எந்தாய்
கடைப்பட்டேன் வறிதே முலை சுமந்து
தஞ்சமேல் ஒன்றிலேன் உய்ந்திருந்தேன்;
தக்கதே நல்ல தாயைப் பெற்றாயே"

என்பதால் தன் பிள்ளைக்குப் பால் கொடுக்கும் பாக்கியம் எல்லாத் தாயும் பெற்றிருப்பாள். தேவகி மட்டும் அந்நிலையில் தவறும் போது, தாயின் உள்ளம் மிகுந்த துன்பத்துக்குள்ளாக்கும். அச்சூழலை அறிந்த குலசேகரர் பிற ஆழ்வார்களைவிட தாயின் அவலத்தை நுணுகி அறிந்து பாடியுள்ளார் என்பதை இதன்மூலம் அறியலாம்.

வஞ்சனையாகப் பேய்ச்சின் முலையுண்டு வளர்ந்தவனே, கம்சனின் ஆயுட்காலத்தை முடித்து மீண்ட கார்முகில் வண்ணனே; உன்னைப் பிள்ளையாகப் பெற்றும், வறிதேதாக முலை சுமந்து தாய்களிலும் கடைப்பட்டவள் ஆனேன். கடைசி வரை உன்னைக் காணவே உயிர் சுமந்துள்ளேன் என்ற தாயுள்ளத்தின் ஏக்கத்தை அழகிய திருமொழிகளில் படைத்துக் காட்டுகிறார். பக்தி நிலைகளைக் காப்பியங்களிலும், சிற்றிலிக்கியங்களிலும், துவைத்து அமுதமாகிய பாசுரங்களை படைத்துக் காட்டுகிறார். இத்தகைய பாசுரங்கள் மக்களின் உள்ளத்தே சென்று உருவமாகத் தோன்றும் மெய்ப்பொருளைக் காணலாம். மனித இனத்துக்கு மட்டுமின்றி, துன்பம், இன்பம், செல்வம், வறுமை, இளமை, முதுமை போன்ற உணர்வுகளில் இறைவனையும் கூறும் பாங்கை அறியலாம். தொல்காப்பியம் கூறும் முப்பத்திரண்டு மெய்பாடுகளையும் தம் பாசுரங்களில் இடத்துக்கேற்ப படைத்துக் காட்டியுள்ளதை அறியலாம்.

கல்வி கேள்விகளில் கற்றறிந்த ஆன்றோர்கள் தன் அடக்கமாகப் படைப்புகளில் காட்டுவதைப் பல இலக்கியங்களிலும் காணலாம்.

அந்நிலையில் தாய் தேவகியின் நிலையில் நின்று 'தாயிற்கடை ஆயின தாயே', கண்டிடப் பெற்றிலேன், கல்வினையில்லா, இன்பத்தை இழந்த பாவியேன், என் செய்யப்பெற்றது எம்மோயே; தன்னையும் இழந்தேன், கடைப்பட்டேன் வறிதே, போன்ற அவலச் சொற்களைப் படைத்து, பக்திக்கு நல் ஒளியேற்றினார் என்பதை இதன்மூலம் அறியலாம்.

## உலா காணும் கண்ணன்

ஆய்பாடியில் யசோதையின் வளர்ப்பு மகனானக் கண்ணன் தோன்றி வளர்ந்து ஆயர் குலத்தை அருள்விக்க செய்கிறான். பசுக்கூட்டங்களை ஒட்டியும், கையில் புல்லாங்குழலை ஏந்தியும் காட்டுக்கு செல்கிறான். யசோதையோ தன் மகனை ஆயர்களின் குற்றச் சாட்டால் ஆநிரை மேய்க்க அனுப்பிவிட்டேன் என்று அசோதை புலம்புகிறார். ஆயர்குலப் பெண்களோ கண்ணனின் கள்ளத் தனத்தையும், குழல் ஓசையையும் கண்ணாலும் செவியாலும் கேட்டு மிகுந்த அன்பு கொள்கின்றனர். அதனைக் கொண்டு தான் குலசேகரர் உலாவாகப் படைத்துக் காட்டுகிறார்.

உலா என்பது தன் நாட்டு அரசன் மலைவளமோ, நாட்டு, நகர் வளமோ காண வருவது உலா. அந்நாட்டு மக்களின் குறை நிறைகளைக் காணவே அவ்வாறு வருதல் வழக்கம். அத்தகைய அன்பு செலுத்தும் தலைவனைக் கேசாதி பாதமாகவும், பாதாதி கேசமாகவும் வர்ணித்து பேரன்பு கொள்வர். அவர்களில் பெண்கள் தான் மிகுந்த அன்பு செலுத்துகின்றனர். பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் ஆகிய ஏழுப் பருவ பெண்களும் காதல் (அன்பு) கொள்வர். அந்நிலையில் குலசேகராழ்வார் நாயகியாகவும் கண்ணனை நாயகனாகவும் நினைத்துப் பாடும் பேற்றினைப் பெற்றுள்ளார். ஆயர்குலத்தில் உலாவரும் கார்வண்ணனைப் பெண்கள் தன்காதலனாக நினைத்து ஏங்கும் பாங்கைக் கையாண்டுள்ளார்.

## நாயகன் நாயகி நிலை

மனித இனத்தில் அகங்காரங்கள் நீங்கி, அன்பான வாழ்க்கைக்கு அடிபணிவர். அத்தகைய அன்பு பொருளாக எல்லாம் வல்ல பரம்பொருளாக இறைவன் அமைந்துள்ளான். அவனைக் காணும் பொருட்டு, பல்வேறு உத்திகளில் காண முற்படுகின்றனர். அதில் நாயக நாயகி நிலை முன்நிற்கிறது. தன்னை காதலியாகவும், இறைவனைக் கணவனாகவும் நினைத்துப் பாடுவதே இந்நிலை. இதனை நாயன்மார்களும், ஆழ்வார்களும் இஸ்லாமிய புலவர்களும், கிறித்துவ பாதிரியார்களும் பின்பற்றுகின்றனர்.

வைணவத்தில் நாயக நாயகி பாவத்தில் பாடுவதில் வல்லவர்கள் திருமங்கை ஆழ்வாரும், குலசேகராழ்வாரும் முன்னோடிகள் எனலாம். குலசேகரர் காதலி தன் கணவனிடம் ஊடியும், கூடியும் பெறும் அன்பினைப் போன்று கண்ணனிடம் பெற துடிக்கிறார். அதில், கண்ணன் ஒரு நாள் மாலைப் பொழுதில் ‘ஆயர்குலப் பெண் ஒருத்தியிடம் யமுனையாற்று மணல் குன்று அருகில் நீ சென்று நிற்பாயாக. அங்கு நான் வருவேன்’ என்று கூறிச் சென்றுள்ளான். அவன் சொற்களைக் கேட்டு அக்குறியிடத்துச் சென்று காணாது, விடியும் காலம் வரை காத்துருந்தாள். அவன் வாராத நிலை அப்பெண்ணுக்குக் கோபத்தை உண்டாக்கியது. மறுநாளே அவனைக் கண்டு தன் கோபத்தை வெளிப்படுத்துகிறாள் என்பதை,

“ஏர்மலர்ப் பூங்குழல் ஆயர் மாதர்
எனை பலர் உள்ள இவ்வூரில் உன்தன்
மார்வு தழுவதற்கு ஆசையின்மை

அறிந்தறிந்தேத உன் தன் பொய்யைக் கேட்டு
கூர் மழைபோல் பனிக் கூதல் எய்திக்
கூசி நடுங்கி யமுனை ஆற்றில்
வார் மணங்குன்றில் புலர நிற்றேன்
வாசுதேவா உன் வரவு பார்த்தே"

என்பதிலிருந்து அப்பெண், உன்னைத் தழுவும் ஆசை எனக்கில்லை காரணம் நீ அன்பு செலுத்தும் ஆயர்பலர் இவ்வூரில் இருக்கின்றனர். உன் பேச்சைக் கேட்டு, பணியிலும், குளிரிலும் நடுங்கி, யாரேனும் தம்மை பார்த்தால் அலர் தூற்றுவர் என அஞ்சியும் நின்றேன் எனக் கூறுவதை அறியலாம். எதைக் கூறினாலும் நம்பும் அப்பேதைப் பருவத்தைக் குலசேகரர் பெற்றிருந்தார் என்பதையும் இதன் மூலம் அறியலாம்.

குலசேகராழ்வார் இறைவனைக் குற்றம் காட்டும் முகமாகக் கண்ணா என் மனைக்கு அடுத்துள்ள கீழைவீடு. அங்கே கெண்டை மீன் போன்ற கண்ணுள்ள பெண் தயிர் கடையும்போது, கள்ளவிழியால் கண்டு அவளருகே சென்றாய்; நானும் விரைவில் கடைந்து வெண்ணெய் தருவேன் என்று கூறினாய். அப்பொழுது உன் மயிர்முடியானது அசையவும், முகத்தில் வேர்வைப் படவும், செவ்வாய் துடிப்பனவுமாக இருந்ததை உண்மையாகவே நான் கண்டேன் என்று இறைவன்பால் ஊடிநிற்கும் பாங்கை அறியலாம்.

### கோபியப் பெண்களின் குற்றச் சாட்டுகள்!

கண்ணனின் செயல்களில் மயங்கியப் பெண்கள் அன்பின் மிகுதி பாடால் பலர் பலவாறு கூறிமுறையிடுகின்றனர். அதனை, 'அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ்' என்ற வாக்கிற்கேற்ப குலசேகரர் ஊடியும் கூடியும் பல பெண்கள் முறையிடுவதாகப் பரவசமடைகிறார். அவர்களுள்,

"கருமலர்க் கூந்தல் ஒருத்தி தன்னைக்
கடைக்கணித்து ஆங்கே ஒருத்தி தன்பால்
மருவி மனம் வைத்து, மற்றொருத்திக்கு
உரைத்து, ஒரு பேதைக்குப் பொய் குறித்து
புரிகுழல் மங்கை ஒருத்தி தன்னைப்
புணர்த்தி; அவளுக்கும் மெய்யக் அல்லை
மடுதி இறுத்தாய் உன் வளர்த்தியூடே
வளர்கின்றதால் உன் தன் மாயை தானே"

இத்தகைய கண்ணனின் திருவிளையாட்டைப் பல ஆயர்குலப் பெண்கள் ஊடியும், கூடியும் அன்பை வளர்த்தப் பாங்கினை இதன்மூலம் அறியலாம்.

மேலும், "என்னைவிட்டுவிட்டு வேறொரு பெண்ணோடு புணர்ந்தாய் என்கிறாள். வேறொரு பெண், மிகுந்த இருள் சூழ்ந்த காலத்தில் மின்னலைப் போல இளையாளோடு, இடை வளையாத வாறு அணைத்துக் கொண்டு சென்றதை என் விதியில் கண்டேன்; அப்படி போகும்போதே வேறொருத்தியிடம் கண்சாடை காட்டினாய்; இன்ன இடத்திற்கு வா என அழைப்பதையும் பார்த்துக்

கொண்டுதான் இருந்தேன் என்கிறாள். கண்ணனும் அவளிடம் வந்தபோது, என்னிடம் வராதே, அவளிடமே போ என்கிறாள்". இதனால் பக்தியின் மிகுதி கொண்டு, கணவனை உயிராகக் கருதும் பெண்கள். வேறொரு பெண்ணிடம் பழகுவதைத் தாங்க முடியாது. அத்தகைய உள்ளுணர்வோடு, கண்ணனை உயிரினும் மேலான கணவனாக மதித்து கூறுவதைக் குலசேகரர் வழி அறியலாம்.

பல ஆயர்குலப் பெண்களும் கண்ணனின் கள்ளப் பேச்சினைக் கேட்டு ஏமாந்தனர். இனியும் ஏமாறாமல் கண்ணனின் மீது கொண்ட அன்பினை விட்டொழிக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு கூறுகிறாள். அதனை,

"பையரவின் அணைப்பள்ளியனாய்
பண்டையோம் அல்லோம் நாம் நீ உகக்கும்
மையரி ஒண் கண்ணினாடும் அல்லோம்;
வைகி எம் சேரிவரவு ஒழி நீ
செய்ய உடையும் திருமுகமும்
செங்கனி வாயும் குழலும் கண்டு
பொய் ஒரு நாள் பட்டதே அமையும்
புள்ளுவம் பேசாதே போகு நம்பி"

என்ற எச்சரிக்கை மொழிகளை ஆயர் குலப் பெண்கள் கூறும் பாங்கை அறியலாம். கண்ணனின் செயல்கள் அனைத்தும் 'மாயை' என்ற உண்மையை மக்களுக்கு உணர்த்தும் பாங்கினை இதன்மூலம் அறியலாம். கண்ணன் மீது கொண்ட அளவில்லா அன்பினை கோபியர்கள் மூலம் வெளிப்படுத்தும் பாங்கினையும் அறிய கூடும்.

சங்க காலத்தில் பொருள் தேட சென்ற கணவர்கள், தம் மனைவியர்க்குக் 'கார் காலத்துக்குள் வருவேன்' என்று கூறிச் சென்றதை மந்திரமாக நினைத்தனர் அக்காலப் பெண்கள். காலம் கடந்தபோது ஊடியும், கூடியும் ஆற்றாமையை உணர்த்துவர். அதுபோன்று ஆயர்குலப் பெண்களும்,

"அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல் போலும் கொல்லும் படை"

கண்ணனின் மாயமொழியாலும், குழல் ஓசையாலும் மயங்கி, பயனற்று தெளிந்தனர். மாயவனின் குழல் ஓசை அப்பெண்களின் உள்ளத்தைக் கொல்லும் படையாக அமைந்ததை அறியலாம்.

இதனைக் கொண்டு நம்மாழ்வார் "மாலை பூசல்", "காலைப் பூசல்" போன்ற பாசுரங்களில் கண்ணனை ஊடுவதாகப் பாடியுள்ளார். "பெரியாழ்வார் கூறும் திருமொழியில்" கோபியர்கள் கண்ணனின் செயல்பாடுகளையும், மாயைகளையும் கண்டு மயங்கினர் என்பதை இதனோடு ஒப்பிட்டு அறியலாம்.

### குழல் ஓசைக் கேட்காதோ!

ஆயர்பாடியில் கண்ணனால் ஈர்க்கப்பட்டு பெண்கள் அன்பின் மிகுதியை

வெளிப்படுத்துவதாக ஒன்பது பாசுரங்களையும் படைத்துள்ளார். கண்ணனின் மாயச் செயல்களைப் பலவாறு காண முற்படும் நோக்காகவும் மனைவியர் கணவனை நினைத்து ஊடுவதாகவும் படைக்கிறார். எனவே இசைக்கு மயங்காத உயிர் இல்லை. கண்ணனின் குழல் ஓசைக் கேட்காத ஆயர்குலப் பெண்ணில்லை எனலாம். அத்தகைய அருளை எனக்குத் தருவாயா என வினவுதாக,

"மங்கலறல் வனமாலை மார்வில்
இலங்க மயில் தழைப்பிலி சூடி
பொங்கு இள ஆடை அரையிள் சார்த்தி
பூங்கொத்து காதிர் புணரப் பெய்து
கொங்கு நறுங் குழலார்களோடு
குழந்து குழல்த இனிது விதி வந்தாய்,
எங்களுக்கே ஒருநாள் வந்து ஊத
உன் குழலின் இசை போதராதே"

என்று கேட்கிறாள். கண்ணனின் மாயமெழிகண்டு நீ 'ஒருத்திக்கும் மெய்யன் அல்ல' என வினவும் குழசேகரரைப் போல் பெரியாழ்வார் போன்றவர்களும் கேட்டதுண்டு. இருப்பினும் குலசேகரர் இப்பதிகம் முழுதும் தலைவி தலைவனைக் கண்டு ஊடல் கொள்ளும் பாங்கில் அமைத்துக் காட்டுகிறார். நாயகன் நாயகி பாவத்தில் நின்றும், தந்தையாக நின்று புலம்பியும், தாயாக நின்று ஏங்கியும், மனைவியாக நின்று வாடியும் பரம்பொருளைப் பெற்றார் என்பதை அறியலாம்.

மக்களினத்திற்கு ஆன்மீகக் கருத்துக்களைப் புகட்டும் ஞானம் பெற்ற ஆழ்வார்களின் பாங்கு, குலசேகரர் வாழ்க்கை, அவரது ஆட்சியும் மாட்சியும், பரம்பொருளாகிய திருமாலைக் காண முற்படும் பாங்கினை ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது. மேலும், இராமாயணக் காப்பியத்திற்கு இவரது பக்தி பாசுரங்கள் துணைநின்ற பாங்கும், அவரது துறவு வாழ்க்கையும் பற்றி ஆராயப்பட்டுள்ளது.

சிற்றிலக்கியத்தில் குலசேகரர் காட்டும் பக்தி நெறி, பிள்ளைத்தமிழ், தாலாட்டு உலா போன்றவைகளில் வெளிப்படும் பாங்கு பகுத்துக் கூறப்பட்டுள்ளது. குலசேகரர் திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டு தந்தையாகவும், தாயாகவும், மனைவியாகவும் நாயகன் நாயகி பாவனையில் தமிழ் நெறியை வளம் படுத்திய பாங்கினையும் வெளிப்படுத்துகின்றது. இதனால் மனிதன் மனிதனாக வாழவும், தர்மங்களை நிலைநாட்டவும், அதர்மங்களை களையவும் பக்தி நெறிகளை வளர்த்தனர். மக்களினத்தில் தோன்றும் ஆசைகளை வென்று ஆன்மீகத்தை வளர்க்க முற்பட்டவர் குலசேகரர் என்பதையும் இதன்மூலம் அறியமுடிகிறது. மண், பெண், பொன்னாசைகளை வென்று இறுதியாகத் துறவறமே நிலையானது என்பதை நிலை நிறுத்தியுள்ளார்.

# 12. குலசேகராழ்வாரின் பக்தி நெறி

ஸ்ரீமந் நாராயணன் இருள் தருமா நாலமாகிய இம்மண்ணுலகில் மக்கள் சம்சாரமாகிய பெருங்கடலிலே விழுந்து துன்பப் படுவதைக்கண்டு, அவர்களுக்கு மெய்யறிவு புகட்டி, கரையேற்றி நல்வழிப்படுத்த நற்கருணை கொண்டார்.

## வைணவம்

குறை வாழ்நாளில் நிறை பிணிகளைப் பெற்றுத் துன்புறும் மனிதனின் மனம் செம்மையடைந்தால் அவன் தெய்வநிலைக்கு உயர்த்தப்படுவான். காண்பற்கு அரிதாகிய இறைவனை இமைப்பொழுதும் நீங்காது மனத்தில் இருத்தி வைப்பவர்களுக்கு அவனது அருள் கிட்டும். இன்றைய நாகரீக உலகில் தவறு செய்பவர்களுக்குத் தண்டனை தர சட்டங்கள் உள்ளன. ஆனால், மனிதனை நெறிப்படுத்தி அவன் உள்ளத்து உணர்வுகளைப் பக்குவப்படுத்தும் கருவியாகச் சான்றோர்களால் தோற்றுவிக்கப் பட்டவை சமயங்கள். அச்சமயங்கள் அறிவுரைகளின் மூலமாக, தத்துவங்களின் மூலமாக, மக்களை ஒன்று சேர்த்து வாழும் நெறியை உருவாக்கின. காலப்போக்கில் மனிதனின் அறிவுத்திறத்திற்கேற்பச் சமயங்கள் பலவாகப் பிரிந்தன. அத்தகைய பிரிவுகளுள் ஒன்று திருமாலை மேலான பரம்பொருளாளக் கொண்ட வைணவ சமயம்.

கடவுளிடம் மாறாத அன்பு பூண்டவர்கள் அடியார்கள். அடியார்களைச் சைவர்கள் நாயன்மார்கள் என்றும், வைணவர்கள் ஆழ்வார்கள் என்றும் அழைப்பது மரபு. இறைவனது குணங்களில் ஆழ்ந்து ஈடுபடும் ஆழவார்களிடையே, அரச பரம்பரையைச் சேர்ந்தவராகிய குலசேகராழ்வார் இறைவனோடு ஒன்றுகலக்க வேண்டுமென்ற பெருவிருப்பம் கொண்டு, முயன்று பின் இறை இன்பத்தைப் பெற்றவர். இறை இன்பத்தைப் பெற அவர் மேற்கொண்ட வழிகளைப் பாசுரங்களின் வழி வெளிப்படுத்துகின்றது.

## இறை மீது பற்று

இறை என்னும் சொல் தங்குவது, தங்கச் செய்வது என இருவகையாகப் பொருள்படும். இவ்வுலகில் உள்ள எல்லாப் பொருள்களுள்ளும் உடல்மீது உயிரென மறைந்து எங்கும் பரவியதும்,

எல்லாப் பொருள்களையும் தன் பேருருவினுள் அடக்கியதுமாகிய இறைவனைக் காணும் பேற்றைப் பெறவேண்டி,

கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டு என்
கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும் நாளே!

என்றும்

ஒளிமதிசேர் திருமுகமும் கண்டுகொண்டு என்
உள்ளம்மிக என்றுகொலோ உருகும் நாளே!

என்றும் பாசுரங்களின் வழி தன் மன உணர்வை வெளிப்படுத்து கிறார்.

***அடியார்***

ஐம்பொறிகளையும் அடக்கி, ஐந்து காலங்களிலும் திருமாலை வழிபடக்கூடியவர்கள் அடியார்கள். இவ்அடியார்களுக்குத் தன்னையும் கொடுத்துத் தன்னை அனுபவிப்பதற்கு ஈடான பலத்தையும் கொடுப்பவன் இறைவன். தான் விரும்பும் அடியார்களிடத்தில் இறைவன் அருளோடு கூடவே தன்னையும் வெளிப்படுத்திக் கொள்கிறான். இத்தகையப் பேறுபெற்ற அடியார்களின் பாதம்பட்ட தூசி, கங்கையைக் காட்டிலும் புனிதமானது என்பதை,

ஆடிப்பாடி அரங்க! ஓ! என்று
அழைக்கும் தொண்டர் அடிப்பொடி
ஆடநாம் பெறில், கங்கை நீர்குடைந்து
ஆடும் வேட்கை என் ஆவதே?

என்ற வரிகளின் வாயிலாக வெளிப்படுத்துகிறார்.

***மிகைபற்று***

நிலையில்லா உலகின் கண் உள்ள பொய்ப் பொருளின் மீது ஏற்படும் பற்றினை நீக்கி, மெய்ப்பொருளாகிய இறைப்பொருளை விரும்பவேண்டும் என்பதனை,

வையகத்து விழைவறுத்து
மெய்யாய பொருள்நயந் தன்று!

என்கிறது புறப்பொருள் வெண்பாமாலை. இவ்வுலக வாழ்வின் உண்மை உணர்ந்து இறைப்பொருளை விரும்பி பக்தி மிகுதியால்,

ஆனந்தக் கண்ணீர் சொரிய, உடம்பு மயிர்க்கூச்செறிய, இறைவனை நினைத்து, ஏங்கித் தளர்ந்து, கும்பிட்டு, நடனமாடி வணங்குவோரைப் பக்திப் பித்துப் பிடித்தவர் என்று கூறுவர். நிலையற்ற உலகப் பொருள்களின் மீது பற்று கொள்வாரைப் பைத்தியம் பிடித்தவர் என்று சாடுகிறார். இதனை,

அத்தன் அச்சன் அரங்கனுக்கு அடி-
யார்கள் ஆகி அவனுக்கே
பித்தராம் அவர் பித்தர் அல்லர்கள்
மற்றையார் முற்றும் பித்தரே

என்கிறார்.

**பற்றை நீக்கல்**

உலகப் பொருள்களில் ஆசை கொள்பவனுக்கு அந்தப் பொருள்கள் தனக்குக் கிடைக்காவிடில் பெருங்குறையாகத் தோன்றும். இதனை,

நசையின் பெரியதோர் நல்குரவு இல்லை

என்கிறது முதுமொழிக்காஞ்சி, நிலையற்ற மண், பெண், பொன் என மனிதரை மீளாத துயரத்துள் ஆழ்த்தும் உலகப் பொருள்கள் மீது பற்றுடையாதை வெறுத்து இறைவனிடம் பற்று கொள்ளும் குலசேகராழ்வார்,

உண்டியே உடையே உகந்து ஓடும் இம்
மண்டலத்தொடும் கூடுவது இல்லை யான்;
அண்டவாணன் அரங்கன் வன் பேய் முலை
உண்ட வாயன்தன் உன்மத்தன் காண்மினே

என்றும்,

தில்லைநகர்த் திருச்சிற்றங்கூடந் தன்னுள்
அரசு அமர்ந்தான் அடிசூடும் அரசை அல்லால்,
அரசு ஆக எண்ணேன் மற்று அரசு தானே

என்ற பாடல் வரிகள் வாயிலாகத் தன் விருப்பு, வெறுப்பை வெளியிடுகின்றார் குலசேகராழ்வார்.

## இறைவனை

அரிய மானிடப் பிறவியையும், தம்மைச் சேர்ந்த அரசச் செல்வத்தையும் பொருட்படுத்தாதவர் குலசேகராழ்வார். மாறாக இறைவன் வீற்றிருக்கும் திருவேங்கடமலையில் மீனாக, சிகரமாக, கானாறாக, பாதையாக, படியாக இப்படி இறைவனை விட்டு அகலாத ஏதோ ஒரு பொருளாக இருப்பதையே விரும்புகிறார்.

இதனை,

கூன்ஏறு சங்கம் இடத்தான் தன் வேங்கடத்துக்
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே

என்றும்,

தேன்ஆர் பூஞ்சோலைத் திருவேங்கட மலைமேல்
கானாறாய்ப் பாயும் கருத்து உடையேன் ஆவேனே

என்றும்,

அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்து இயங்கும்
படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே

என்றும் இறைவன் கூடவே இருக்க விரும்பும் தன் விருப்பத்தை மேற்கண்ட பாசுரங்களில் வெளியிடுகின்றார்.

## இறைவனை அடைதல்

இறைவனிடம் தன்னை முழுமையாக ஒப்படைத்துச் சரணடைவதும், பக்தி செலுத்துவதும் கடவுளை அடைவதற்குரிய வழியாகும். எதைப்பற்றியும் கவலைப்படாமல் முற்றிலும் அவனே கதி என்று சரணடைவார் அனைவருக்கும் அவன் அருள்கிட்டும். அதை முற்றிலும் உணர்ந்த குலசேகராழ்வார் தன்னைத் தாய் அன்பை நினைத்து அழும் குழந்தைபோல, கொண்டவனைத் தவிர வேறு ஒருவனை நாடாத குலப்பெண் போல, மருத்துவனிடம் தீராத அன்பு வைக்கும் நோயாளி போல இறைவா உன் திருவடிகளைத் தவிர வேறுகதி அறியேன் என்ற தன் மனத் தவிப்பினை,

அரிசனத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்று அவன்தன்
அருள்நினைந்தே அழும்குழவி;
அதுவேபோன்று இருந்தேனே

என்றும்,

எங்கும் போய்க்கரை காணாது எறிகடல்வாய் மீண்டுஏயும்
வங்கத்தின் கூம்புஏறும் மாப்பறவை போன்றேனே

என்று தன் உணர்வைப் புலப்படுத்தியுள்ளார்.

## இறைவனுடன் உறவு

இறைவனுடன் தன்னைப் பல நிலைகளில் தொடர்புப்படுத்தி தன் உறவினனாகக் காட்டுகின்றார் குலசேகரர். இறைவனை நாயகனாகவும் தம்மை நாயகியாகவும், தம்மைத் தாயாகவும் இறைவனைச் சிறுபிள்ளையாகவும், தம்மைத் தந்தையாகவும் இறைவனை மகனாகவும் வைத்துப் பாடியிருக்கின்றார். இதனை,

இன்னம் என் கையகத்து ஈங்கு ஒருநாள்
வருதியேல், என் சினம் தீர்வன் நானே

என்றும்,

அடக்கியாரச் செஞ்சிறு விரல் அனைத்தும்
அரங்கையோடு அணைந்து, ஆனையிற் கிடந்த
கிடக்கை கண்டிலப் பெற்றிலன், அந்தோ!

என்றும்,

எம்மானை என் மகனை இழந்திட்ட இழிதகையேன் இருக்கின்றேனே!

என்றும் பாடியுள்ளார். அதாவது மனித உறவுகளில் உள்ள நெருக்கத்தை இறைவனோடு காட்டியிருக்கின்றார்.

## இன்ப மருந்து

ஆசையே துன்பத்திற்குக் காரணம். எனவே ஆசை களைந்து இறைவனை மறவா உள்ளம் உடையவனாக விளங்கினால், இறைவனே நம் துன்பத்தை நீக்கிடுவான் என்பதை

தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
உறைவானனை மறவாத உள்ளந்தன்னை
உடையோம்; மற்று உறுதுயரம் உடையோம் அன்றே

என்ற வரியில், தில்லைநகர்த் திருச்சித்திர கூடத்தில் வாழும் இராமனை மாறாதவர்கள் வருத்தமடைய மாட்டார்கள் என்கிறார்.

## அமிழ்தம் வேண்டா

பற்றை அறுத்த அடியார்களுக்குச் சிறந்த மருந்தாக அமைந்து, அமிழ்தத்தைத் தேவர்களுக்குக் கொடுத்தருளி, பெருமையுடைய வானுலகங்கள், தேவர்கள், பூவுலகம், மனிதர்கள் ஆகியோர் உய்தற்பொருட்டு அவர்களது பாவங்களை நீக்கி, சுகம் பெருகச் செய்யும் பெருமானின் கதையைச் செவியால் கேட்டு, கண்ணால் காணும் பேறுபெற்றால், இனி அமிழ்தைக் கூட பொருளாக மதியோம் என்கிறார் குலசேகராழ்வார். இதனை,

எம்பெருமான் தன்சரிதை செவியால் கண்ணால்,
பருகுவோம். இன்னமுதம் மதியோம் அன்றே

என்ற வரிகளில் இறைவன் அமிழ்தினும் உயர்ந்தவன் என்பதை அறிவிக்கிறார்.

## தன்னையறிதல்

அகப்பற்று, புறப்பற்று என்பனவற்றைத் துறப்பவர் வீட்டுலகத் துக்கு உரியவர் என்பதனை,

துறப்பார் துறக்கத் தவர்

என்கிறது நான்மணிக்கடிகை. வீடு என்பது தன்னையறிதலாகும். தன்னை உணரும் நிலையை ஒருவன் அடைய வேண்டுமானால் அகங்காரத்தை விட்டொழிக்க வேண்டும். குற்றமற்ற உள்ளத்தோடு இறைவனின் திருவடியைத் தன் முடியிற் சூடினால் "பரமபதம்" எனப்படும் வீடுபேற்றினை அடையலாம். இதனை,

கொல்லி காவலன் மால்அடி முடிமேல்
கோலமாம் குலசேகரன் சொன்ன
நல்லிசைத் தமிழ்மாலை வல்லார்கள்
நண்ணுவார் ஒல்லை நாரணன் உலகே

என்ற பாசுரவரிகளால் வீடுபேற்றிற்குரிய வழியைக் காட்டுகின்றார். குலசேகராழ்வார், இறைவனுக்காகத் தம்வாழ்வைப் பக்தியில் அர்ப்பணித்துக் கொண்டு, தன்னை முழுமையாக இயக்குவது

இறைவனின் திருவருள் என்று உணர்ந்தவர் குலசேகராழ்வார். நிலையற்ற இவ்வுலகில் நிலைத்த இன்பம் தரும் இறைவனோடு தான் பெற்ற அனுபவத்தை, அதன் வாயிலாகப் பெற்ற இறை இன்பத்தைப் பிறரும் பெற வேண்டுமென்பதற்காகத் தம் பாடல்களில் பகிர்ந்தளித்துள்ளார். அழிகின்ற உடலைப் பெற்ற மனிதன், அழியாத ஆன்மாவோடு புலன்களைக் கட்டுப்படுத்தினால் இறைவனின் திருவடிப்பேற்றை அடையலாம் என்கிறார்.

## 13. குலசேகர ஆழ்வாரின் பக்தியுணர்வு

உலகில் தருமங்கள் தழைக்கவும் நீதிநெறி வாழவும் இறைவன் அவதாரம் எடுத்து மண்ணுலகில் தோன்றினார்.

'யானையைக் கொண்டே யானையைப் பிடிப்பதைப் போல' மனிதர்களைக் கொண்டே மனிதரைத் திருத்த எண்ணி கடவுள் ஆழ்வார்களாக அவதாரம் செய்தார்கள்.

முடிவு இல்லாத வேதங்களின் கருத்தை, திருமாலின் பெருமைகளை ஆராய்ந்து, அந்தப் பொருளில் குலசேகர ஆழ்வார் 105 பாசுரங்களை இயற்றியுள்ளார். தன் பாசுரங்களில் பல உண்மைகள் வாயிலாக தனக்கும், திருமாலுக்கும் உள்ள உறவுபற்றி வாழ்வியலுடன் இணைந்து பக்திச்சுவையுடன் விளக்கி உள்ளார்.

### தாயான திருமால்

இறைவனைத் தாயாகவும், தன்னைக் குழந்தையாகவும் பாவித்துக் குலசேகர ஆழ்வார் பாடுகிறார். தாய்க்கோ தான் ஈன்றெடுத்த குழந்தையின் மேல் சினம். அதனால் குழந்தையை இழுத்துத் தொலைவில் விடுகிறாள். சினத்தால் தன்னைத் தாய் அகற்றிவிட்டாள். இனி அவளிடம் நாம் செல்லக்கூடாது என்று குழந்தை எண்ணாமல் அவளுடைய அன்பினை நினைத்து அவளையே நெருங்குகிறது. அதுபோல சோலை சூழ்ந்த வித்துவக்கோடு என்னும் புண்ணிய தலத்திலே எழுந்தருளியுள்ள. திருமாலே! நீ தந்த துன்பத்தை நீயே போக்க வில்லை என்றாலும் உன் சரண் அல்லாது வேறு சரண் இல்லை. இதன் மூலம் திருமாலைத் தாயாகவும், தன்னைக் குழந்தையாகவும்

நினைக்கிறார்.

**திருவடிப்புகழ்**

தன்னைச் சூழ்ந்து உள்ள சுற்றுத்தவரும், மற்றவர்களும் இகழ்ந்து பேச, தன் கணவன் இழிவான செயலைப் புரிந்தாலும் இக்கணவனைத் தவிர வேறு யாரையும் தன் சிந்தனையாலும் தொடமாட்டார்கள் கற்புடைய குல மகள். அது போல வானுலகைத் தொடுவது போன்ற உயரமான மதிலையுடைய வித்துவக்கோட்டு என்னும் தலத்தில் எழுந்தருளிய திருமாலே! நீ என்னை ஒரு ஆளாக ஏற்றுக்கொண்டாலும், வணங்கமாட்டேன், உன் திருவடிகளையே புகழ்வேன் என்கிறார்.

**மன்னன் பக்தி**

"கோல் நோக்கி வாழும் குடிபோல் இருந்தேன்." செங்கோல் ஆட்சி செய்யும் வேந்தன் குடிமக்களை உயிராகவும் தன்னை உடலாகவும் கொண்டு வாழ்வான். ஆனால் கொடுங்கோல் ஆட்சி செய்யும் மன்னன் மக்களை வருத்துவான். கொடுங்கோல் மன்னன் பல துன்பங்களைச் செய்தாலும், அந்நாட்டு மக்கள் அந்த மன்னனின் கோல் நோக்கியே வாழ்வார்கள். அதுபோல எனக்குத் துன்பத்தைத் தந்தாலும் நான் உன் பற்றைவிட மாட்டேன் எனத் தன் பக்தியை விளக்குகிறார்.

**மருத்துவன் - நோயாளி**

வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன் பால் மாளாத காதல் நோயாளன் போல மருத்துவன் தன்னை வாளால் அறுத்துச் சுடுகிறான். ஆனால் அந்த மருத்துவனிடம் அழியாத அன்பை வைத்திருக்கிறான் அந்த நோயாளி. அது போல திருமாலை மருத்துவராகவும், தன்னை நோயாளியாகவும் கொண்டு, எனக்கு மாளாத துன்பத்தைத் தந்தாலும் நான் உன்னுடைய அருளை எதிர்பார்த்து வாழ்வேன் என்கிறார்.

**பயிர் போல**

"பைங்கூழ்கள் மைத்தெழுந்த மாமுகிலே
பார்த்திருக்கும் மற்றவை போல்"

பயிர்கள் மழைபெய்த போது பசுமையாகக் காணப்படும். அந்த

மழை பெய்யாவிடினும் மழை முகிலையே எதிர்பார்த்து ஓங்கும் பயிர்கள் போல என்துன்பத்தை நீ அழிக்காவிட்டாலும், உன்னுடைய திருவடியிலேயே என்னுடைய சிந்தனையை வைப்பேன் என்கிறார்.

### திருமாலே சொத்து

மலையிலிருந்து தோன்றிய ஆறானது, குளம், குட்டை, ஏரிகளை நிரப்பி சமவெளிகளில் பாய்ந்து பின் கடலில் இரண்டறக் கலந்து விடும் அதுபோல எத்தனை செல்வங்கள் இருந்தாலும் அழியாச் செல்வமான திருமாலே உன்னை அல்லாது வேறு செல்வம் எதுவும் இல்லை என்கிறார்.

### செந்தாமரை

சூரிய ஒளியில்தான் செந்தாமரை மலரும், அதனை விடுத்து செந்தழிலின் சுடரில் தாமரை மலராது. அதுபோல உன் முடிவற்ற சிறந்த திருவடிகண்டுதான் என் உள்ளம் மலரும். அதைவிட்டு வேறு எந்தப் பொருளாலும் என் உள்ளத்தை மலரச் செய்ய முடியாது என்கிறார்.

### அடைக்கலம்

நடுக்கடலில் நாலாப் பக்கங்களிலும் பறந்து தரை காண முடியாமல் தவிக்கும் பறவை ஒரு படகு வருவதைக் கண்டு, பறந்து சென்று அதன் கூம்பில் அமர்ந்து இளைப்பாறுவதுபோல கொடுமையான கண்ணினையுடையக் களிற்றினை அடக்கிய வித்துவக்கோட்டு அம்மானே! இவ்வுலகியரில் இன்ப வாழ்வு தேடி எங்கெங்க அலைந்தாலும் உன் திருவடி மீது பற்றுக் கொண்டு வந்துவிட்டேன். எனக்கு அடைக்கலம் தருவாய் என வேண்டுகிறார்.

எங்கும், எதிலும் கலக்கமற நிறைந்துள்ள இறைவனின் அருள் ஒன்றுதான் இவ்வுலகத் துன்பங்களைப் போக்கும் வலிமையுடையது. நன்றும், தீதும் நிறைந்துள்ள உலகமானது துன்பங்களைப் போக்கும் வலிமையுடையது. நன்றும், தீதும் நிறைந்துள்ள உலகமானது தீதினை எதிர்கொண்டு நல்லதைத் தேடி அலைவது போல இறைவனைக் கண்டு அவன் அருளைப் பெற வேண்டும் என்பதே குலசேகர ஆழ்வாரின் ஆழமான சிந்தனை என்பதை அறிய முடிகின்றது.

# 14. குலசேகராழ்வாரின் இராம பக்தி

உலக மக்கள் ஆன்மீக மேன்மையுற வேதங்களையும், புராணங்களையும், சாத்திரங்களையும் தோற்றுவித்தனர். மேலும், நாராயணன் தாமே மச்சமாகவும், ஆமையாகவும், வராகமாகவும், நரசிம்மமாகவும், வாமனனாகவும், பரசுராமனாகவும், இராமனாகவும், பலராமனாகவும், கண்ணனாகவும் அவதாரம் செய்து மக்களை மாண்புற செய்தார்.

தமிழில் உள்ள தனித்தன்மை வாய்ந்த நூல்களுள் திவ்வியப்பிரபந்தமும் ஒன்றாகும். அது வைணவப் பக்தி நூலாயினும் சமய எல்லையைத் தாண்டி அது தரும் கவிதை அனுபவம் நிலத்தினும் பரந்தது; வானினும் உயர்ந்தது; தேனினும் சிறந்தது; அதனால் பலரும் விரும்பிப் பயிலும் நூலாக அது திகழ்கின்றது. குலசேகரர் பாடிய பெருமாள் திருமொழிப்பில் காணலாகும் இராமாயணக் கூறுகள் பற்றி அமைகிறது.

## பக்தி இயக்கம்

சங்க இலக்கியங்கள், காப்பியங்களுக்கு அடுத்துத் தமிழுக்குச் செழுமை சேர்த்த பெருமையுடையது பக்தி இலக்கியங்கள். பக்தி இலக்கியம் மனித மனத்தைப் பண்படுத்துகிறது. கி.பி.600 முதல் 900 வரையிலான காலம் 'பக்தி இயக்கக் காலம்' என வரையறுத்துள்ளனர்.

அன்றைய தமிழ்ச் சமூகத்தில் சாதி வேற்றுமை நிலவிய போதிலும், 'இறையடியார் யாவரும் வணங்கத் தக்கவரே' என்னும் கொள்கையினைப் பக்தி இயக்கம் முன்னிறுத்தியது. 'நீசனும் பக்தனானால் அவனுக்கும் முக்தி உண்டு' என்பதை எடுத்துக்காட்டியது.

'வினை செய்தவனை விடாது வந்து துன்புறுத்தும்; வினைப்பயனை நுகர்ந்தேதான் கழிக்க வேண்டும்; என்பது சமணர் கொள்கை. இதற்குமாறாகச் சைவ, வைணவ சமயங்கள், 'வினைக்கும் வினையாக உள்ளவன் இறைவன்; நாம் அவனது கால்களைக் கட்ட வினைக்கட்டுகள் யாவும் அவிழ்ந்து ஒழியும்' என்று கூறி மக்களைத் தம்மிடத்தே ஈர்த்தன.

பக்தி இயக்கம் மக்கள் இயக்கமாகச் செல்வாக்குப் பெற்றதற்கு இதனையே முதற்காரணமாகக் காட்டுகிறார் க.கைலாசபதி.

கற்றோர்க்கு மட்டுமே உரியதாகக் கருதப்பட்ட இலக்கியத்தை மக்கள் இலக்கியமாக மாற்றிய பெருமை பக்தி இயக்கத்திற்கு உண்டு. பேச்சு வழக்கில் உள்ள பழகு தமிழ் சொற்களை உயிர்த்துடிப்புடன் கையாண்டனர். ஆழ்வார்களும் நாயன்மார்களும் சங்க அகத்திணை மரபைத் தழுவி நாயகி பாவனையில் தெய்வத்தின்பால் கொண்ட மானுடக் காதலைப் பாடியுள்ளனர்.

### *ஆழ்வார்கள்*

திருமாலைப் பரம்பொருளாக ஏத்தி வழிபடும் வைணவப் பெரியோர் ஆழ்வார், ஆச்சார்யர் என இருவகைப்படுவர். இவர்களுள் ஆழ்வார்கள் எனப்படுவோர் உள்ளடங்காது கசிந்த - தம் இறையன்பையும் அனுபவத்தையும் உலகை உய்விப்பதே நோக்கமாக ஈரத்தமிழ்ப் பாசுரங்களாகப் பாடி வெளிப்படுத்தியவர்கள். ஆழ்வார்' என்னும் சொல்லுக்கு 'இறைவனுடைய கல்யாணகுணங்களில் ஆழ்ந்து ஈடுபடுவோர்' என்பது பொருள். 'வேறொன்றில் கண்வையாதே பகவத்குணங்களில் ஆழங்காற்பட்டிருந்தமையால் ஆழ்வார் என்று பெயராயிற்று என்பர். ஆழ்வார் பன்னிருவர் பாடிய பாசுரங்களின் தொகுப்பு நாலாயிர திவ்விய பிரபந்தம் ஆகும். அதனைத் தொகுத்தவர் நாதமுனி ஆவார். அவர்களுள் குலசேகராழ்வார் பாடியது பெருமாள் திருமொழி ஆகும்.

### *பெருமாள் திருமொழி*

குலசேகரன், திருமால் மீது மிகுந்த பற்றும் பாசமும் கொண்டவர். அவருக்குப் பெருமாள் என்ற பெயரும் உண்டு. அதனால் அவர் பாடிய பிரபந்தத்திற்குப் பெருமாள் திருமொழி என்று வழங்கினர்.

நாலாயிர திவ்விய பிரபந்தத்தில் பெரியாழ்வார், ஆண்டாள் ஆகியோரின் நூல்களை அடுத்து ஐந்தாவதாகக் குலசேகரரின் பெருமாள் திருமொழி இடம் பெற்றுள்ளது.

பெருமாள் திருமொழியில் பத்து அல்லது பதினொரு பாசுரங்கள் கொண்ட பத்துப் பதிகங்கள் உள்ளன. வைணவ மரபுப் பதிகம் ஒவ்வொன்றும் 'திருமொழி' எனப்பெயர் பெற்றது. இப்பத்துத் திருமொழிகளிலும் உள்ள மொத்தப் பாசுரங்களின் எண்ணிக்கை 105

முதல் ஐந்து திருமொழிகள் ஆழ்வாரின் பக்தி மேலீட்டாலான தன்னுணர்ச்சி அனுபவத்தை வெளியிடுவதாக அமைகின்றது. அடுத்துவரும் ஐந்து திருமொழிகளும் இராம, கிருஷ்ணாவாதாரம் பற்றிய தொன்மரபுக் கதைகளைப் பற்றி எழுந்தவை.

குதிரை வடிவான கேசி அசுரனின் வாயைப் பிளந்தும், ஆயர்களுக்காகக் கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்தும், காத்தப் பெருமானை மலர் தூவி வழிபடும் நாள் எப்போது என்ற ஏக்கத்தில் பாடுவதன் வாயிலாக ஆயர் குலத் தலைவனாகவும் தேவர்குலத் தலைவனாகவும் எல்லா உயிர்களிடத்தும் அன்பு காட்டுபவர் திருமால் என்பதை உணர்த்துகிறார்.

நாராயணனின் புகழ் மந்திரமாகிய எட்டெழுத்தை நாவால் ஓதி, மனத்தால் இன்புற்றிருக்கும் அடியவர்களுக்குத் தொண்டுசெய்வதே சிறந்த கடமை என்கிறார்.

திருவேங்கடமலையிற் பிறவி வேண்டும் என்கிறார் குலசேகரர், அங்கு எப்பிறப்பேனும் எய்த அருள்வாய்' என்று கற்றாவின் மனம் போலக் கசிந்துருகுவது கற்போரின் மனத்தையெல்லாம் கரைத்துருக்கும் வகையில் அமைந்துள்ளது.

அரங்கனிடம் அடைக்கலமாகக் கொண்டு பித்தனாய் இருக்க பெருமையடைவதோடு, அடுத்துவரும் ஏழு பிறப்பிலும் அரங்கனுக்கே பித்தனாக இருக்க விரும்புகிறார்.

குலசேகராழ்வார் எல்லாப் பொருள்களிலும் அரங்கனைக் கண்டார். திருவேங்கட மலையில் ஏதாவது ஒன்றாகப் பிறக்க விரும்பினார் அத்துடன் இராமனைப் பற்றிய கதைகளைக் காப்பியமாகக் படைத்துக் காட்டுகிறார். அங்கண் நெடுமதில்' என்ற பதிகத்தில் அதனை முழுமையாக அறியலாம்.

தாடகையை அழித்ததும், விசுவாமித்திரர் வேள்வி காத்ததும், சிவதனுசை முறித்துச் சீதையை மணம் புரிந்ததும், பரசுராமனை வென்றது ஆகியன முதல் மூன்று பாசுரங்களில் பாலக்காண்ட சுருக்கத்தைக் கூறியுள்ளார்.

மாற்றாந்தாய் கைகேயின் சூளுரையால் இராமன் வனம் ஏகியது, குகன் உதவியால் கங்கைக் கரையைக் கடந்து, பரதனுக்குப் பாதுகை தந்தது, சித்திரக்கூடம் சென்றது ஆகிய அயோத்தியா காண்ட கருத்தைப் பாடியுள்ளார்.

அகத்தியரிடம் வில்லைப் பெற்றதும், சூர்ப்பனகையின் மூக்கை அறுத்ததும், கரதூனர்களை அழித்ததும், மாரீசனைக் கொன்றதும் என்று ஆரண்ய காண்ட சுருக்கத்தைக் காட்டுகிறார்.

சடாயுவை வைகுந்தம் அனுப்பியதும், சுக்கீரிவனைத் தம் தம்பியாக ஏற்று தோழமை பூண்டதும், வாலியைக் கொன்றதும், மாருதியை தூதனுப்பி இலங்கையைச் சாம்பலாக்கியதுமான கிட்கிந்தை, சுந்தரக் காண்ட கருத்துக்களைப் பாடியுள்ளார்.

சீதையைப் பிரிந்த இராமன், இராவணனிடம் இருந்து சீதையை மீட்டு வருவதற்காக அனுமனின் துணைக் கொண்டு கடலில் அணைக் கட்டியதும், அரக்கரோடு போர் புரிந்ததும், இராவணனைக் கொன்றதும், வீபிடணனை அரசு அமர்த்தியதும் சீதையை மீட்டதும் ஆக யுத்தக் காண்ட நிகழ்வுகளை ஏழாம் பாசுரத்தில் பாடியுள்ளார்.

குலசேகரருக்கு இராம காதையில் மிகுந்த ஈடுபாடு உண்டு. அதைச் சான்றோர் வாக்கினால் அறிய முயன்றார்.

இவ்வாறு இராமாயணக் கருத்தைச் சுருக்கி எளிய சொற்களில் பாடி பாமரருக்கும் இராமன் வரலாறு புரியுமாறு பாசுரம் பாடியுள்ளார். அது இராமகாதை தொடர்ந்து நிலைபெறுவதற்கு ஏதுவாகும். குலசேகரர், இராமன் மீது கொண்டுள்ள அன்பு புலனாகின்றது. அவர் இராமன் மீது பற்று கொண்டிருந்ததற்கு இராமனைப் போன்று அரச பதவியைத் துறந்து திருமலையில் ஏதாவது ஒன்றாகப் பிறக்க விரும்பியது தக்க சான்றாக விளங்குகின்றது. எனவே குலசேகரர், இராமனைப் பாசுரத்தில் மட்டும் பாடியதோடு நில்லாமல் அப்படியே வாழ்ந்தவர் குலசேகரர் எனலாம்.

## 15. குலசேகராழ்வார் பாசுரங்களில் குழவி

இலக்கியம் ஒரு கலை. உள்ளத்தின் உணர்ச்சியே கலை வடிவமகப் அமைகிறது. உள்ளத்து உணர்ச்சிகளைச் சொற்களால் தீட்டும் ஓவியம் என்றும் கூறலாம்.

பல்லவர்கள் ஆட்சி செல்வாக்குப் பெற்று நல்லதோர் ஆட்சியை நிலைநாட்டியக் காலத்தில் சைவ - வைணவ சமயங்கள் புத்துயிர் பெற்று எழுந்தன. "சைவப் பெரியார்களான நால்வரும் பன்னிரு ஆழ்வார்களும் இக்காலத்தே தோன்றிச் சமய உணர்வூட்டும் பக்திப்பாடல்களைப் பாடினர். இதனால் இக்காலத்தே சமய எழுச்சிப் பெற்று மன்னரையும்

மக்களையும் பாடுவது போல் இறைவனையும். இறைவனின் அடியார்களையும் பாடும் இலக்கிய மரபு எழுந்தது". பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவரான குலசேகரர் சேரநாட்டில் சேரமன்னர் மரபில் திருவஞ்சிக் களத்தில் தோன்றியர். கல்வி, புகழ், செல்வம், வெற்றியாவும் ஒருங்கே பெற்ற இவர் திருமாலிடம் கொண்ட பக்தியால் அரசபோகத்தைத் துறந்தார். இவர்பாடிய பாசுரங்கள் பெருமாள் திருமொழியும், வடமொழியில் முகுந்தமாலையுமாகும். "ஆழ்வார்களின் பாடல்கள் உணர்ச்சியையே உயிராகக் கொண்டவை. அவற்றில் அடிப்படையான தத்துவங்கள் விரவியே கிடக்கின்றன". "குலசேகரார் திருவேங்கடத்தம்மன் மீது பாடியிருக்கும் திருமொழி கவிதைச் சிறப்பும். பக்தி நலமும் கெழுமிய பனுவல்" என்கிறார் பாலசுப்பிரமணியன், தாயுள்ளம் கொண்ட இறைவனின் குழந்தை உள்ளத் திருவிளையாடல்களை மனத்துள்ளே மகிழ்நது இன்புற்று குலசேகரர் தனது பாசுரங்களில் சித்தரிக்கும் குழந்தைத் தன்மையைக் காண முடிகின்றது.

### குழவித்தோற்றம்

குழந்தையின் தோற்றம் மனிதர்களை வசீகரிக்கக் கூடியது. கல்மனத்தையும் கரையச் செய்யக்கூடியது. மேற்கட்டித் தொங்கவிடப்பட்டிருக்கும் தொட்டிலில் செந்தாமரை மலரினை ஒத்ததான கண்களுடன், சிறுத்த சிவந்த திருவடிகளை முடக்கிகனவாக்க கண்ணன் படுத்திருக்கும் அழகை,

"மருவி மேல்இனிது ஒன்றினை நோக்கி
முடக்கிச் சேவடி மலர்ச்சிறு கருந்தாள்
பொலியும் நீர்முகில் குழவியே"

என்று பாடுகிறார். மேலும் கழுத்தளவுப் பருகின நீர்விளங்கப் பெற்ற மேகக்குட்டி போன்று. விரல்களை உள்ளங்கையில் அடக்கும்படியாக இறுக்கப் பிடித்துக் கொண்டு யானை படுத்திருப்பதைக் கண்டபோது,

"அடக்கி யாரச்செஞ் சிறுவிரல் அனைத்தும்
அங்கையொடு அணைந்து ஆணையிற் கிடந்த"

என்று குழந்தையின் தோற்றத்தைக் கண்டு மனத்துள் பதித்தவறாகப் பாடுகிறார். முழுநிலவையொத்தத் திருமுகமும், திருக்கைகளும், திருக்குழற்கற்றையும், பிறைநுதலும், திருமார்பும்,

திருக்கண்களுமாகிய தோற்றத்தில் குழந்தைக் கண்ணனைக் காணும்போது,

"களிநி லாஎழில் மதிபுரை முகமும்
தளிர்ம லர்க்கருங் குழல் பிறை அதுவும்
தடங்கொள் தாமரைக் கண்களும் பொலிந்த"

என கண்ணனின் உருவ அழகை எண்ணியெண்ணி உள்ளத்தால் மகிழ்ந்து பாடுகின்றார்.

குழந்தைகளை உறங்கப் பண்ணவதற்காகப் பெண்கள் நாவை யசைத்தும் பாடுவது தாலாட்டு. நாட்டுப்புற மரபில் தொடங்கி இன்று வரை மக்கள் மத்தியில் வழங்கப்பட்டு வருகின்றது. இசைக்கும் மயங்காத உயிர்கள் இல்லை. தாயானவள் நாவையசைத்து எழுப்பும் ஒலியானது குழந்தையை உறங்கப் பண்ணுகிறது. கண்ணனைக் குழந்தையாகப் பெற்றும் தாலாட்டுப் பாட முடியாமல் போன தேவகியின் ஏக்கப் பெருமூச்சின் தொனியை உள்வாங்கியவராகக் குலசேகரர் பாடும்போது,

"ஆலைநீள் கரும்பு அன்னவன்தாலோ
அம்புயந்தடங் கண்ணினன் தாலோ
வேலை நீர்நிறத்து அன்னவன் தாலோ
ஏலவார் குழல் என்மகன் தாலோ"!

எனத் தாலாட்டுப் பாடுகின்றார்.

கண்ணனே இராமனகக் கோசலையின் வயிற்றில் தோன்றியவர். இவரே பிரம்மனைத் தோற்றுவித்தபோதும், மகாபிரளயத்திற்குப் பின்னும் தானே பாலகனாய் அவதரித்த தோற்றத்தினைக் கண்டபோது

"மன்னு புகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே"!
"புண்டரிக மலரதன்மேல் புவனியெல்லாம் படைத்தவனே"!
"ஆலின் இலைப் பாலகனாய் அன்றுலகம் உண்டவனே"!
"ஆலிநகர்க்கு அதிபதியே அயோத்திமனே தாலேலோ"!

என்று குழந்தையாய் பிறந்த கண்ணனே பிறப்புக்கு எல்லாம் மூலம் எனவும், எல்லாம் மூலம் எனவும், எல்லாம் கல்ந்தவன் என்றறிந்த நிலையில் பாடுகின்றார்.குழந்தையின் மனம்

**குழந்தையின் மனம்**

குழந்தையின் செயல்பாடுகள் வேடிக்கை நிறைந்ததாகக் காணப்படும் கொடுமையோ, அகங்காரமோ மற்றும் எவ்விதத் தீய எண்ணங்களோ அடங்கியிருக்கவில்லை. மழலைச் சொல் செவிக்கும் மனத்துக்கும் கிடைக்கவொண்ணா விருந்தாகும். குழந்தையின் சொல்லே மனத்தினில் இனிக்கும் போது குழந்தையிடும் முத்தத்தைக் குறிப்பிடும் ஆழ்வார்.

"மருவும் நின்திரு நெற்றியில் சுட்டி
அசைத ரமணி வாயிடை முத்தம்" என்றும்
"விரயைச் செஞ்சிறு வாயிடைச் சேர்த்து
வெகுளி யாய்நின்று உரைக்கும் அவ்வுரையும்"

உள்ளத்தால் உணர்ந்த ஆழ்வார் குழந்தையிடும் முத்தத்தின் இனிமையும் சொல்லின் அழகையும் வார்த்தைகளினால் காட்சியப்படுத்துகிறார்.

"குழந்தையானது உதைத்தல், அழுதல், விழித்தல், உறுமுதல், பெருமூச்சு விடுதல் போன்ற செயல்களால் தன் இருப்பை வெளிப்படுத்துவதில் தன்னைச் சுற்றியுள்ள உலகத்திற்குத் தெரிவிக்க வேண்டிய முயற்சிகளில் பாதியை இவனே செய்து விடுகின்றான். குழந்தை செய்யும் சுட்டித்தனங்களைப் பற்றி ஆழ்வார்.

"முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டுண்ணும்
முகிழ் இளஞ்சிறுத் தாமரைக் கையும்
நிலையும் வெண்தயிர் தோய்ந்த செவ்வாயும்"

அகச் சிவந்தவாயில் வெண்தயிரையும், வெண்ணெயையும் திருடித் தின்பதும் பயந்து பயந்து பார்க்கிற பார்வையுமாகக் காணப்படும் குழந்தைக் கண்ணனின் சுட்டித்தனத்தை இன்பத் தொல்லையாக எண்ணுகிறார்.

"ஒழுகு பேரெழில் இளஞ்சிறு தளிர் போல
வாயிலே முலையிருக்க என்முகத்தே"

என்று ஒரு கையால் ஒரு கொங்கையின் காம்பை நெருடிக்கொண்டு மற்றோரு கொங்கை உள்வாயில் இருக்க இடையிடையே தாயின் முகத்தை நோக்கிச் சிரிக்கும் குழந்தையின் விளையாட்டுத் தன்மையை இங்கு பதிவு செய்கிறார்.

திருப்தியடைந்தவன் தேன் கூட்டையும் மிதிப்பான் என்ற சொல்லுக்கு ஏற்ப தாய்ப் பாலில் திருப்தியடைந்த குழந்தையான கண்ணனின் விடையாட்டுத் தனத்தை இப்பாடலில் உணர்த்துகிறார். குழந்தை தானே உண்ணும் அழகினைக் குறிப்பிடும்போது

"வண்ணச் செஞ்சிறு கைவிரல் அனைத்தும்
வாரி வாய்க் கொண்ட அடிசிலின் மிச்சில்"

எனக் குழந்தை உணவினைமேலும் கீழுமாக வேடிக்கையாக அள்ளி எடுத்து உண்ணும் அழகினைச் சித்திரமாகக் காட்சிப் படுத்துகிறார்.

### வெள்ளை மனம்

குழந்தைகள் வெள்ளை மனம் கொண்டவர்கள். சூதறியாதவர்கள், பிறருக்கு அடங்கிப் போதும் தன்மையுடையவர்கள். "குழந்தைகள் உள்ளத்தை உள்ளபடி மட்டும் சொல்வதில்லை. உள்ளதை உணர்ந்தபடியும் சொல்கிறார்கள். மாற்றிச் சொல்கிறார்கள்", "குழவியின் உள்ளம் புத்தம் புதியது. அனுபவங்கள் தத்தம் பலப்பல வண்ணங்களையும் குழவி உள்ளத்தில் பூசிவரவில்லை" என்கிறார். குலசேகரர் குழந்தை உள்ளத்தைக் குறிப்பிடும்போது

"அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்
அருள் நிறைந்தே அழும் குழவி அது"

என்கிறார்.

பெற்ற தாயானவள் குழந்தையை வெறுத்தத் தள்ளுவாளோ? அவ்வாறு தள்ளினாலும் அக்குழந்தை தாயின் அன்பை நினைத்தே ஏங்கி அழும் என்கிறார். அன்பு நிறைந்த குழந்தை உள்ளத்திற்கு அப்பாற்பட்ட நிலையில் பக்தர்களைக் காக்க வேண்டித் தீமையை அழித்து நீதியை நிலைநாட்ட, எழும் போர்க்குண உள்ளம் கொண்ட குழந்தையைப் பாசுரத்தில் குறிப்பிடும்போது

"தாய்முலைப் பாலில் அமுது இருக்கத்
தவழ்ந்து தளர் நடையிட்டுச் சென்று
பேய் முலை வாய்வைத்து நஞ்சை யுண்டு
பித்தன்என் றேபிறர் ஏசநின்றாய்"

என்கிறார்.

இங்குக் குழந்தையான கண்ணன், குழந்தை உள்ளத்திற்கு முரணான நிலையில், "பாவம் தோற்கும் அறம் வெல்லும்" என்ற நீதியை நிலைநாட்ட பூதகியினுடைய கொங்கையில் தடவியிருந்த நஞ்சைதான் உண்டு பக்தர்களிடம் பித்தன் என்ற பெயர் பெற்றான்.

திருமாலின் மீது தீராக் காதல் கொண்ட குலசேகரர் தன்வாழ்வை இறைப்பணிக்கே முழுமையாக அர்ப்பணித்தவர். திருவேங்கடமலை, திருக்கண்ணபுரம். திருவித்துவக் கோட்டுப் பெருமான் எனத்தளங்கள் தோறும் சென்று இறைபக்தியைப் பரப்பினவர். இவர் பாசுரங்களில் கண்ணனின் குழந்தைப்பருவத் தோற்றம் பற்றிய சிறப்பு,. வாழ்த்தும் தாலாட்டுப் பாடல்கள், குழந்தைப் பருவச் செயல்பாடுகள், குழந்தையின் உள்ளபாங்கினை உணர்ந்தவர். பாசுரங்களில் ஓவியங்களாகச் சித்தரித்துள்ளார். கண்ணனின் குழந்தைப்பருவத்தைக் கண்டு உள்ளம் பறிகொடுத்த குலசேகரரின் ஆழ்வாரைப் உள்ளத்தைப் பாசுரங்களின் வாயிலாக அறியமுடிகிறது.

# 16. ஸ்ரீ குலசேகரர் அருளிச்செய்த பெருமாள் திருமொழி

## அரங்கப் பெருமானை என்று கண்டு மகிழ்வேன் எனல்

1. இருள் இரியச் சுடர் - மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தி அணி பணம் ஆயிரங்கள் ஆர்ந்த
அரவ - அரசப் பெருஞ் சோதி அனந்தன் என்னும்
அணி விளங்கும் உயர் வெள்ளை - அணையை மேவித்
திருவரங்கப் பெரு நகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக் கையால்அடி வருடப் பள்ளிகொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டு என்
கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும் நாளே?

திருவரங்கம் பெரிய கோயிலில் காவிரி ஆற்றின் நடுவே இருள் சிதறிப் போம்படி ஒளிவிடும் மாணிக்கங்கள் விளங்குகிற நெற்றியும், சிறந்த புள்ளிகளும், அழகான ஆயிரம் படங்களை உடையனாய், நாகங்களுக்குத் தலைவனாய், திருவன்த்தாழ்வானாகிய அழகு மிகுந்து உயர்ந்த வெண் நிறமான திருப்படுக்கையிலே பொருந்தி, தெளிந்த நீர் புரளும் காவேரி அலைகளாகிற கைகளாலே, திருவடிகளைப் பிடிக்கத் திரக்கண் வளர்ந்தருளுகிற நீலமணி போன்றவனை, அழகெல்லாம் திரண்டு வடிவெடுத்தவனை, என் கண்கள் கண்டின்ப மகிழ்வெய்தல் எந்த நாளோ? என்று நெஞ்சம் நெக்குருகின்றார்.

2. வாய்ஓர் ஈரைஞ்னூறு துதங்கள் ஆர்ந்த
வளை உடம்பின் அழல் நாகம் உமிழந்த செந்தீ
வீயாத மலர்ச் சென்னி விதானமே போல்
மேன்மேலும் மிக எங்கும் பரந்ததன் கீழ்
காயாம்பூ மலர்ப் பிறங்கல் அன்ன மாலை,
மாயோனை மணத்தூணே பற்றி நின்று என்
வாயார என்றுகொலோ வாழ்த்தும் நாளே!

துதிகள் நிறைந்த ஒப்பற்ற ஆயிரம் வாயையும், வெளுத்த திருமேனியையும் உடையவனாய், எதிரிகள் அருகில் வர முடியாதபடி, செந்தீயை உமிழ்கிற ஆதிசேடன் கக்கிய செந்நிறமான தீத்தழல் எம்பெருமான் திருமுடிக்கு மேற்கட்டியைப்போல் எல்லா இடத்திலும் பரவி நிற்க, அந்தத் தீயின் கீழ்க் காயாம்பூ மாலையைப் போல

இருப்பவனை, மதியை அரணாக உடைய பெரிய கோயிலில் பாம்பணையில் கண் வளரும் மாயவனை, மணக்கும் தூண்கள் இரண்டையும் பற்றி நின்று என் வாயாரப் பரவும் நாள் என்று ஏற்படுமோ? என்று ஆவல் மீதூரப் பேசுகின்றார்.

அழகிய மணவாளனது திருமேனியின் பரிமளம் (பரிமளம்-மிகுமணம்) இரண்டு தூண்களாக உருவெடுத்துள்ளன என்று கூறுவர்.

3. எம்மாண்பின் அயன் நான்கு நாவினாலும்
எடுத்து ஏத்தி ஈரிரண்டு முகமும் கொண்டு
எம்மாடும் எழிற்கண்கள் எட்டினோடும்
தொழுது ஏத்தி இனிது இறைஞ்ச நின்ற செம்பொன்
அம்மான்தன் மலர்க் கமலக் கொப்பூழ் தோன்ற
அணி அரங்கத்து அரவணையிற பள்ளிகொள்ளும்
அம்மான்தன் அடியிணைக் கீழ் அவர்கள் இட்டு அங்கு
அடியவரோடு என்றுகொலோ அணுகும் நாளே!

எல்லா வகையிலும் பெருமையுடைய பிரமன் தன் நான்கு நாவினாலும் சொல் எடுத்துப்போற்றி, நான்கு முகங்களாலும் இனியமையாக வேதங்களால் வழிபட்டு, அழகிய எட்டுக் கண்களினாலே எல்லாப் பக்கங்களிலும் நன்றாக வணங்கிச் சிவந்த பொன்போலே விரும்பத்தக்க திருமேனியர் தம்முடைய தாமரைப்பூ உந்தியாக விளங்கக் கோயிலிலே, திருவனந்தாழ்வான்மேல் கண் வளரும் பெருமாளின் திருவடிகளின் கீழே மலர்களிட்டு, அங்குள்ள அடியார்களோடு கூடும் நாள் எந்நாளோ? என்கிறார்.

4. மாவினை வாய் பிளந்து உகந்த மாலை, வேலை
வண்ணனை, என் கண்ணனை, வன் குன்றம் ஏந்தி
ஆவினை அன்று உயக் கொண்ட ஆயர்-ஏற்றை,
அமரர்கள் தம் தலைவனை, அந்தமிழின் இன்பப்
பாவினை, அவ் வடமொழியை, பற்று-அற்றார்கள்
பயில் அரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
கோவினை, நா உற வழுத்தி என்தன் கைகள்
கொய்ம்மலர் தூய் என்றுகொலோ கூப்பும் நாளே!

குதிரை வடிவ கேசி அசுரனின் வாயைக் கிழித்து மகிழ்ந்தவனாய், கடல் நிறம் உடையவானய், கண்ணனாய், கோவர்த்தன் மலையைத் தூக்கிப் பசுக்களைக் காத்த இடையர் தலைவனாய், முத்தர் இறையாய்,

அழகிய தமிழ்போல இனிய வடமொழி போல் உயர்ந்தவனாய், துறவிபோல் வாழும் திருவனந்தாழ்வான் மேலே கண் வளரும் அரங்கநாதனை நாக்குத் தழும்பேறப் போற்றி என் கைகளால் பறித்த மலர்களைத் தூவி அஞ்சலி செய்யும் நாள் எந்நாளோ? என்கிறார்.

5. இணையில்லா இன்னிசை யாழ் கெழுமி இன்பத்
 தும்புருவும் நாரதனும் இறைஞ்சி ஏத்த,
துணையில்லாத் தொல் மறை நூல்-தோத்திரத்தால்
 தொல் மலர்க்கண் அயல் வணங்கி ஓவாது ஏத்த,
மணிமாட மாளிகைகள் மல்கு செல்வ
 மதில்-அரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
மணிவண்ணன் அம்மானைக் கண்டுகொண்டு என்
 மலர்ச் சென்னி என்றுகொலோ வணங்கும் நாளே!

யாழிசையால் இன்பந்தரும் தும்புருவும் நாரதனும் திருவடிகளிலே விழுந்து துதிக்கவும், ஒப்பற்ற பழைய வேத நூல் போற்றலால் நான்முகன் திருவடிகளிலே வணங்கி இடைவிடாமல் துதி செய்யவும், நவமணி மாட மாளிகைகளையும் மிகுந்த செல்வத்தையும் ஏழு சுற்றுடைய பெரிய கோயிலில் பாம்பணைமேல் பள்ளி கொள்ளும் நீலமணி நிறமுடைய எம்பெருமானை வணங்க, என் பூமாலை அணிந்த தலை அவன் திருவடிகளில் வணங்கும் நாள் எந்நாளோ? என்கிறார்.

அதாவது இறைவனடி மென்மையானது ஆதலால் என் வன்தலை கொண்டு வணங்குதல் ஆகாது. எனவே பூச்சூடி தலையை மென்மை செய்து மெல்லடியில் வணங்க முயல்கிறார்.

6. அளிமலர்மேல் அயன் அரன் இந்திரனோடு ஏனை
 அமரர்கள்தம் குழுவும் அரம்பையரும் மற்றும்
தெளிமதி சேர் முனிவர்கள்தம் குழுவும் உந்தித்
 திசை திசையில் மலர் தூவிச் சென்று சேரும்
களிமலர் சேர் பொழிவு - அரங்கத்து உரகம் ஏறிக்
 கண்வளரும் கடல் வண்ணர் கமலக் கண்ணும்
ஒளிமதி சேர் திருமுகமும் கண்டுகொண்டு என்
 உள்ளம்மிக என்றுகொலோ உருகும் நாளே!

வண்டுகள் படித்திருக்கிற தாமரையில் உள்ள பிரம்மாவும், சிவனும் இந்திரனோடு தேவர் குழாமும் அரம்பை முதலிய தேவமாதரும், தெளிந்த அறிவுடைய முனிவர்களுமாக ஒருவருக்கொருவர் நெருங்கிப்

பார்த்த விடமெங்கும் மலர்களை இறைத்துத் தேன் மிக்க மலர்ச் சோலைகள் சூழந்த பெரிய கோயிலில் அறி துயில் கொண்டிருக்கிற கடல் நிறப் பெருமாளுடைய செந்தாமரைக் கண்களையும், ஒளியுடைய திருமுக மண்டலத்தையும் கண்டு என் மனம் மிகவும் உருகுகின்ற நாள் என்றைக்கு வாய்க்குமோ? என்று ஏங்குகிறார்.

7. மறந்திகழும் மனம் ஒழித்து வஞ்சம் மாற்றி
வன் புலன்கள் அடக்கி இடர்ப் பாரத் துன்பம்
துறந்து இரு முப்பொழுது ஏத்தி எல்லை இல்லாத்
தொல் நெறிக்கண் நிலைநின்ற தொண்டரான
அறந்திகழும் மனத்தவர்தம் கதியை, பொன்னி
அணி அரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
நிறந்திகழும் மாயோனை, கண்டு என் கண்கள்
நீர்மல்க என்றுகொலோ நிற்கும் நாளே!

கொடுமை நிறைந்த மனத்தை ஒழித்து; வஞ்சனைகளைப் போக்கி, கொடிய ஐம்புலனை அடக்கிப் பழவினைச் சுமையைக் களைந்து, ஐந்து வேளையும் துதித்து, அளவிறந்த பழைய வரம்பிலிருந்து வழுவாத அடியார்களான இரக்கம் நிறைந்த மனமுடையவர்களுக்கு அடையத் தகுந்தவனாய், காவேரியால் சூழப்பெற்று, அரங்கத்திலே அழகும் வியப்பும் மிகு எம்பெருமானை என்னுடைய கண்கள் கண்டு மகிழ்ச்சிக் கண்ணீர் பொங்கும் நாள் என்றோ? என அகநெகழ்ந்து ஆழ்வார் உரைக்கின்றார்.

8. கோல் ஆர்ந்த நெடுஞ்சார்ங்கம் கூனற் சங்கம்
கொலையாழி கொடுந்தண்டு கொற்ற ஒள் வாள்
கால்ஆர்ந்த கதிக் கருடன் என்னும் வென்றிக்
கடும்பறவை இவை அனைத்தும் புறஞ் சூழ் காப்ப
சேல்ஆர்ந்த நெடுங்கழனி சோலை சூழ்ந்த
திருவரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
மாலோனைக் கண்டு இன்பக் கலவி எய்தி
வல்வினையேன் என்றுகொலோ வாழும் நாளே!

அம்புகளோடு கூடிய பெரிய சாரங்கம் என்னும் வில்லும், வளைந்துள்ள வலம்புரியும், கொல்ல வல்ல சக்கரமும், கதையும் நாந்தகம் என்னும் வாளும், காற்றைப் போன்ற விரைவையுடைய கருடனும் ஆகிய இவையெல்லாம் சூழ்ந்து பாதுகாக்க, மீன்கள் நிரம்பிய

வயல்களாலும் சோலைகளாலும் சூழப்பட்ட திருவரங்கத்தில் பள்ளிகொள்ளும் காதலனை, அடியேன் கலந்தின்புற்றுத் தீவினையேன் ஒப்புயர்வற்ற மகிழ்வின்பம் நுகர்ந்து வாழ்வது எந்த நாளோ? என்கிறார்.

9. தூராத மனக்காதல் - தொண்டர் தங்கள்
குழாம் குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி
ஆராத மனக் களிப்போடு அழுத கண்ணீர்
மழை சோர நினைந்து உருகி ஏத்தி நாளும்
சீர் ஆர்ந்த முழவு - ஓசை பரவை காட்டும்
திருவரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
போர் ஆழி அம்மானைக் கண்டு துள்ளிப்
பூதலத்தில் என்றுகொலோ புரளும் நாளே!

ஒருநாளும் நிறைவுறாத ஆசை கொண்ட மனமுடையார் குழுவுடன் கூடி எம்பெருமான் சிறப்புகளைப் பாடி, தனியாத மனமகிழ்வால் அழுத கண்ணீர் மழை பெருகி வர, இறைவனை நினைத்து மனமுருகிப் புகழ்ந்தேந்தி, நாளும் நல்ல பல்லியங்கள் கடலோசைபோல் முழங்கும் திருவரங்கத்திலே பள்ளி கொள்ளும், திருவாழியையுடைய எம்பெருமானைக் கண்டின்புற்றுத் தலை கால்தெரியாமல் கூத்தாடி மண்ணிப் புரளும் நாள் என்றோ? என்கிறார்.

10. வன்பெரு வானகம் உய்ய, அமரர் உய்ய,
மண் உய்ய, மண் - உலகில் மனிதர் உய்ய,
துன்பம் மிகு துயர் அகல அயர்வு ஒன்று இல்லாச்
சுகம்வளர அகம் மகிழும் தொண்டர் வாழ,
அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளும்
அணி-அரங்கன் திருமுற்றத்து அடியார் தங்கள்
இன்பமிகு பெருங் குழுவு கண்டு யானும்
இசைந்துடனே என்றுகொலோ இருக்கும் நாளே!

வானகமும், வானவரும் வாழவும், நானிலமும் நானில மக்கள் வாழவும், துன்பம், துயரம், அயர்வு ஆகியின நீங்கி நலம் பெருகித் தொண்டர்கள் மனமகிழவும், காதலோடு தென் திசையை நோக்கி அறிதுயில் கொண்டிருக்கும் மாயோனின் திருவரங்கைக் கோயில் முற்றத்தில் கூடியிருக்கும் குழுவினரைக் கண்டு, அவர்களுடன் இருந்து மகிழும் நான் எந்த நாளோ? என்கிறார்.

11. திடர்விளங்கு கரைப் பொன்னி நடுவுபாட்டுத்
திருவரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
கடல்விளங்கு கருமேனி அம்மான் தன்னைக்
கண்ணாரக் கண்டு உகக்கும் காதல்தன்னால்
குடைவிளங்கு விறல் தானைக் கொற்ற ஒள் வாள்
கூடலர்கோன் கொடைக் குலசேகரன் சொற் செய்த
நடைவிளங்கு தமிழ் மாலை பத்தும் வல்லார்
நலத்திகழ நாரணன் அடிக்கீழ் நண்ணுவாரே.

திட்டுகள் விளங்கும் கரையையுடைய காவேரியின் நடுவே திருவரங்கத்தில் பள்ளிகொள்ளும் கரிய திருமேனிப் பெருமாளைக் கண்களாலே கண்டு மகிழும் ஆசையினால் கொற்றக் குடையுடன் விளங்கும், வெற்றிப்படையும் வாளையுமுடைய மதுரைக்கு அதிபதி குலசேகரப்பெருமாள் அருளிய பாசுரங்களைச் சொல்ல வல்லவர்கள் நாயராயணன் திருவடிகளில் சேரப் பெறுவர்.

திருமால் வழிபாட்டினும் திருமாலின் அடியார் வழிபாடு சிறந்ததெனக் கருதினார் குலசேகராழ்வார். அகமும் புறமும் ஒன்றுபட்டு உயிர்களிடத்தே இறைவனைக் கண்டு, உவந்து, வழிபாடு செய்வதைத் திருமாலின் அடியவரிடைப் பரப்பியவர் ஆவார்.

## அரங்கநாதனது அடியார்க்கு அடியனே்

12. தேட்டு அருந் திறல் தேனினைத் தென்
அரங்கனைத் திருமாது வாழ்
வாட்டம் இல் வனமாலை மார்வனை
வாழ்த்தி மால் கொள் சிந்தையராய்
ஆட்ம் மேவி அலந்து அழைத்து அயர்வு
எய்தும் மெய்யடியார்கள் தம்
ஈட்டம் கண்டிடக் கூடுமேல், அது
காணும் கண் பயனாவதே.

தேடி அடைவதற்கு அருமையான, தேன் போன்றவனை, தென் திருவரங்கத்தில் வாழ்பவனை, திருமகள்வாழ் மார்பில் துழாய் மாலையை அணிந்துள்ளவனை, அரங்கநாதனை வாழ்த்தி வணங்கி, அவன் மேல் அன்பு கொண்ட மனத்தையுடையராய், அதனாலே ஆடுவதில் ஈடுபட்டு, ஆடலின் மிகுதியினால் வருந்திக் கடவுள்

பெயர்களை வாய் படைத்ததன் பயன்பெறச் சொல்லி, மெய் மறந்திருக்கும் உண்மை அன்புடைய அடியார்களின் குழாங்களைக் காணப் பெறுவோமாகில், கண் படைத்ததற்குப் பயன் ஆகும் என்கிறார்.

13. தோடுஉலா மலர் மங்கை தோளிணை
தோய்ந்ததும் சுடர் வாளியால்
நீடுமா மரம் செற்றதும் நிரை
மேய்த்ததும் இவையே நினைந்து
ஆடிப்பாடி அரங்கவோ என்று
அழைக்கும் தொண்டர் அடிப்பொடி
ஆடநாம் பெறில், கங்கை நீர் குடைந்து
ஆடும் வேட்கை என் ஆவதே?

தாமரையில் வாழ் திருமகளின் திருத்தோள்கள் இரண்டையும் அணைந்தருளியதும், உயர்ந்த மராமரங்கள் ஏழினைத் துளைத்ததும், பசுக் கூட்டங்களை மேய்த்ததுமாகிய நிகழ்வுகளை எண்ணி மகிழ்ந்து ஆடிப் பாடி, "ஓ! அரங்கனே!" என்று கூப்பிடுகிற தொண்டரான அடித் தூளிகளிலே நாம் ஆடப் பெற்றால், கங்கையின் நீரில் குடைந்து நீராடவேணும் என்கிற ஆசையானது ஏதுக்கு? இதுவே போதும் என்கிறார்.

14. ஏறுஅடர்த்ததும் ஏனமாய் நிலம்
கீண்டதும் முன் இராமனாய்
மாறுஅடர்த்ததும் மண் அளந்ததும்
சொல்லிப் பாடி வண் பொன்னிப் பேர்-
ஆறுபோல் வரும் கண்ண நீர் கொண்டு
அரங்கன் கோயில் - திருமுற்றம்
சேறுசெய் தொண்டர் சேவடிச் செழுஞ்
சேறு என் சென்னிக்கு அணிவனே.

நப்பின்னைக்காக ஏழு எருதுகளைக் கொன்றதும், நிலத்தைத் தந்தத்தினால் குத்தி விடுவித்ததும், இராமனாய்ப் பிறந்து இராவணனைக் கொன்றதும், இந்திரன் பொருட்டு உலகளந்ததும், வாயாரச் சொல்லிப் பாடிப் பெருவெள்ளமிட்டுக் காவேரிபோல் வருகிற கண்ணீரினால் அரங்கநாதனின் கோயிலின் உள் திருமுற்றத்தைச் சேறாக்குகிற தொண்டர்களின் திருவடிகளால் மிதிக்கப்பட்ட சேற்றை என் தலையிலே தரித்துக்கொள்வேன் என்கிறார்.

15. தோய்ந்த தண் தயிர் வெண்ணெய் பாலுடன்
உண்டலும் உடன்று ஆய்ச்சி கண்டு
ஆர்த்த தோள் உடை எம்பிரான் என்
அரங்கனுக்கு அடியார்களாய்
நாத்தழும்ப எழு நாரணா என்று
அழைத்து மெய் தழும்பத் தொழுது
ஏத்திஇன்புறும் தொண்டர் தொண்டர் சேவடி
ஏத்தி வாழ்த்தும் என நெஞ்சமே.

தோய்க்கப்பட்டுக் குளிர்ந்துள்ள தயிரையும், வெண்ணெயையும் பாலையும் ஒரே காலத்தில் அமுது செய்தவுடன், யசோதை கையும் களவுமாகப் பார்த்து, அவளால் பிடித்துக் கட்டப்பட்ட தோள்களையுடைய எம் அரங்கநாதனுக்கு ஆள்பட்டவர்களாய், நாக்குத் தடிக்கும் படிப் போற்றி வணங்கி மகிழ்வு அடைகிற தொண்டர்களுடைய திருவடிகளை என் மனம் துதித்து அவர்களுக்கே பல்லாண்டு பாடும் என்கிறார்.

16. பொய்சிலைக் குரல் ஏற்று - எருத்தம்
இறுத்துப் போர் - அரவு ஈர்த்த கோன்
செய்சிலைச் சுடர் சூழ் ஒளித் திண்ண
மா மதில் - தென் அரங்கனாம்
மெய்சிலைக் கருமேகம் ஒன்று தம்
நெஞ்சில் நின்று திகழப் போய்
மெய்சிலிர்பவர் தம்மையே நினைந்து
என் மனம் மெய் சிலிர்க்குமே

பொய்ச்சீற்ற காளைகளின் முசுப்புகளை முறித்த போர் செய்ய வந்த நாகத்தைத் துவைத்து நசுக்கினவனாய், கல்லினால் வலிமை பொருந்தியதாய், பெரிதான மதில்களால் சூழப்பட்ட தென்னரங்கதில் எழுந்தருளி இருப்பவனான அரங்கதனாகிற தன் உடலான வில்லோடு கூடிய ஒரு காளமேகம் தங்கள் மனத்தில் நிலைத்து விளங்கப்பெற்று, மயிர்க் கூச்செறியும் மெய்யுடைய அடியார்களையே என் நெஞ்சு நினைத்து மயிர் கூச்செறியப் பெற்றது என்கிறார்.

17. ஆதிஅந்தம் அனந்தம் அற்புதம்
ஆன வானவர் தம்பிரான்
பாதமா மலர் சூடும் பத்தி-
இலாத பாவிகள் உய்ந்திடத்

தீதில் நன்னெறி காட்டி எங்கும்
திரிந்து அரங்கன் எம்மானுக்கே
காதல்செய் தொண்டர்க்கு எப் பிறப்பிலும்
காதல் செய்யும் என் நெஞ்சமே.

முதலுக்கும் முடிவுக்கும் காரணனாய், எக்காலத்தும் ஒரே நிலையில் வாழ்பவனாய், எல்லாப் பொருள்களிலும் நிற்குமவனாய், அமரர் தலைவனின் சிறந்த மலர் திருவடிகளைத் தலையில் ஏற்கும் பத்தி இல்லாத பாவிகளும் உய்யும்படி எல்லா இடங்களிலும் குற்றமற்ற நல்ல வழிகளைத் தாம் செய்து காட்டும் நம் தலைவர் அரங்கநாதனுக்கே பேரன்பு பூண்டியருக்கின்ற அடியார்களிடத்தில் என்னுடைய மனம் பிறவியிலும் பேரன்வு பூண்டிருக்கும் என்று புகல்கின்றார்.

18. காரினம் புரை மேனி நற்கதிர்
முத்த வெண்ணகைச் செய்ய வாய்
ஆரமார்வன் அரங்கன் என்னும்
அரும் பெருஞ்சுடர் ஒன்றினைச்
சேரும் நெஞ்சினர் ஆகிச் சேர்ந்து
கசிந்து இழிந்த கண்ணீர்களால்
வாரநிற்பவர் தாளணைக்கு ஒரு
வாரம் ஆகும் என் நெஞ்சமே.

கருமுகில் திருமேனியையும், ஒளி முத்துப் பற்களையுடைய சிவந்த வாயையும், திருத்துழாய் மாலையை அணிந்த மார்மையுமுடைய அரங்கநாதனாகிற கிடைத்தற்கரியதும் பெருமை பொருந்திய ஒப்பற்ற சுடரைக், கிட்டி நுகர வேணுமென்ற எண்ணம் உடையராய், அங்ஙனமே சேர்ந்து அன்புப் பெருக்காலே கரைந்து அதனால பெருகும் கண்ணீர் பெருகி ஓடும்படி நிற்பவர்களுடைய இரண்டு திருவடிகளின்பால், என் மனம் ஒப்பற்ற அன்புடையதாகும் என்கிறார்.

19. மாலை உற்ற கடற் கிடந்தவன்
வண்டு கிண்டு நறுந்துழாய்
மாலை உற்ற வரைப் பெருந் திரு-
மார்வனை மலர்க் கண்ணனை
மாலை உற்று எழுந்து ஆடிப் பாடித்
திரிந்து அரங்கன் எம்மானுக்கே
மாலை உற்றிடும் தொண்டர் வாழ்வுக்கு
மாலை யுற்றது என் நெஞ்சமே.

தன் திருமேனியைத் தீண்டுதலால் களிப்படைந்து அலை எறியும் திருப்பாற்கடலில் பள்ளிகொள்பவன், தேனீக்கள் திளைக்கும் திருத்துழாய் மாலையை அணிந்த மலைபோற் பெருமை தங்கிய திருமார்பை உடையவன், செந்தாமரைக் கண்களை யுடைவன் அந்த அரங்கநாதனிடம் அன்புடன் கூத்தாடிப் பாடிப் பித்தேறித் திரியும் அடியவர்களின் வாழ்வுயர்வுக்கே என் மனம் காதல் கொண்டிருக்கின்றது.

20. மொய்த்துக் கண் பனி சோர மெய்கள்
சிலிர்ப்ப ஏங்கி இளைத்து நின்று
எய்த்துக் கும்பிடு நட்டம் இட்டு எழுந்து
ஆடிப் பாடி இறைஞ்சி என்
அத்தன் அச்சன் அரங்கனுக்கு அடி-
யார்கள் ஆகி அவனுக்கே
பித்தராம் அவர் பித்தர் அல்லர்கள்
மற்றையார் முற்றும் பித்தரே.

பரமனை நினைத்து விழிகள் மழைபோல் மகிழ்ச்சிக் கண்ணீர் பொழியவும், உடல் மயிர்க்கூச்செரியவும், ஏங்கித் தளர்ந்து நின்று நிலை கலங்கிக் கூத்தாடி நின்றவிடத்து நில்லாமல் பலவகை ஆட்டங்களாடிப் பாட்டுகள் பாடி வணங்கி, என் தந்தையும் என் அண்ணனுமான அரங்கநாதனுக்கு அடியார்களாக ஆகி, அந்தப் பெரிய பெருமாளுக்கே பற்றுடன் பித்தேறித் திரிகிறவர்கள் பித்தர் அல்லர்; அவன்பால் பற்றிலாதவரே பித்துப் பிடித்தவர்கள் என்கிறார்.

21. அல்லி மா மலர் - மங்கை நாதன்
அரங்கன் மெய்யடியார்கள் தம்
எல்லை இல் அடிமைத் திறத்தினில்
என்றும் மேவு மனத்தனாம்
கொல்லி-காவலன் கூடல் - நாயகன்
கோழிக்கோன் குரசேகரன்
சொல்லின் இன்தமிழ் மாலை வல்லவர்
தொண்டர் தொண்டர்கள் ஆவரே.

சிறந்த தாமரை மலரில் பிறந்த பிராட்டியின் மணவாளன் அரங்கநாதனுடைய உண்மையான அடியார்களுடைய எல்லையில்லாத தொண்டிலே எப்போதும் பொருந்திய திருவுள்ளத்தையுடையவர்.

கொல்லி நகர் அரசரும், மதுரைக்கு நாயகரும், உறையூர்த் தலைவருமான குலசேகராழ்வாருடைய சொற்களான இனிய தமிழ்ப் பாட்டுகளைப் படிக்க வல்லவர்கள் அடியார்களுக்கு அடியார்களாவர்.

## அழகிய மணவாளன் பால் பித்தன் எனல்

திருமால் அடியார் திறத்தில் மிகுந்த காதல் கொண்டிருந்த குலசேகரர், அரங்கன் அடியார் அல்லாதவரோடு தமக்குச் சிறிதும் தொடர்பில்லை. திருமாலோடு மட்டும்தான் பெரிய ஈடுபாடு என்பதைக் கூறுவது மெய்யில் வாழ்க்கையில் கூறியுள்ளார்.

22. மெய் இல் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளும் இவ்
வையம் தன்னொடும் கூடுவது இல்லை யான்;
ஐயனே; அரங்கா! என்று அழைக்கின்றேன்
மையல் கொண்டொழிந்தேன் என்தன் மாலுக்கே.

நிலையற்ற இவ் உலக வாழ்க்கையை நிலையானது என்று கருதும் இவ் உலகத்தாரோடு நான் சேருவதில்லை. ‘அரங்க நாதனே!’ என்று கூப்பிடுகிறேன். நான் என் திருமாலிடத்தில் அன்பு பூண்டவனாக இருக்கின்றேன்.

23. நூலின் நேர் - இடையார் திறந்தே நிற்கும்
ஞாலம் தன்னோடும் கூடுவது இல்லை யான்;
ஆலியா, அழையா, அரங்கா! என்று
மால் எழுந்தொழிந்தேன் என்தன் மாலுக்கே.

நூல்நிகர் மெல்லிடைப் பெண் இன்பமே பேரின்பம் என்னும் உலகத்தவர்களோடே நான் கூடுவது இல்லை. அன்பின் மிகுதியினால் ஆடி, ‘அரங்க நாதனே!’ என்று கூப்பிட்டுப் பேரன்பு பூண்ட பெருமாள் திறத்திலேயே மையல் கொண்டேன் என்று கழறுகிறார் குலசேரர்.

24. மாரனார் வரி வெஞ் சிலைக்கு ஆட்செய்யும்
பாரினாரொடும் கூடுவது இல்லை யான்;
ஆர மார்வன் அரங்கன் அனந்தன் நல்
நாரணன் நரகாந்தகன் பித்தனே.

(நல் நாரணன் - நன்மை மங்களம் இன்பம் நமக்கு இன்பம் தரும் நாராயணன்)

ஐங்கணை மன்மதந் வில்லுக்கு அடிமைப்பட்டு உலக மக்களோடு நான் கூடுவது இல்லை. முத்துமாலையன், முழு முதல்வன், காவலன் அன்பரணா திருவரங்கனிடம் மட்டுமே அன்பு பூண்டுள்ளேன்.

25. உண்டியே உடையே உகந்து ஓடும் இம்
மண்டலத்தொடும் கூடுவது இல்லை யான்;
அண்டவாணன் அரங்கன் வன்பேய் - முலை
உண்ட வாயன்தன் உன்மத்தன் காண்மினே.

உணவுக்கும் உடைக்கும் உளையும் இந்த உலகத்தாரோடு நான் கூடுவது இல்லை. உலகண்ணல், பூதனையை மாய்த்தவன், அன்புக்கெளியன், அரங்கநாதன் அருளின் பைத்தியம் பிடித்தவனாய் இருக்கிறேன்.

26. தீதில் நன்னெறி நிற்க, அல்லாது செய்
நீதியாரொடும் கூடுவது இல்லை யான்;
ஆதி ஆயன் அரங்கன் அந் தாமரைப்
பேதை மா மணவாளன்தன் பித்தனே.

குற்றமற்ற நல்வழி போகாமல் பொல்லாங்கு விரும்புகிறவர்களோடு நான் கூடுவதில்லை. ஆதிபகவன், அழகிய தாமரைச்செல்வி திருமகளின் திருமணவாளன், அரங்கநாதனின் பித்தனாக மட்டுமே இருக்கிறேன்.

27. எம் பரத்தர் அல்லாரொடும் கூடலன்;
உம்பர் வாழ்வை ஒன்றாகக் கருதலன்;
தம்பிரான் அமரர்க்கு அரங்க நகர்
எம்பிரானுக்கு எழுமையும் பித்தனே.

என்னைப் போல் அடிமை செய்யாதாரோடு நான் கூடமாட்டேன் விண்ணக வாழ்வையும் வேண்டேன். அமரர்க்குத் தலைவன் அரங்கநாதன் எம்பிரானிடம் எழுபிறப்பும் பித்தனாய் இருப்பேன் என்கிறார்.

28. எத்திறத்திலும் யாரொடும் கூடும் அச்
சித்தந்தன்னைத் தவிர்த்தனன் செங்கண் மால்;
அத்தனே! அரங்கா என்று அழைக்கின்றேன்;
பித்தனாய் ஒழிந்ததேன் எம்பிரானுக்கே.

எதை அடைவதற்கும், எவ்விதமான மனிதர்களோடும் சேர்ந்தழிவதைச் செங்கண்மால் முந்தியிருந்து நீக்கினான். 'அப்பா! அரங்கா!' என்று கூப்பிடுகிறேன். என் தலைவணங்கிப் பித்தனாவிட்டேன். பித்தனாய் ஒழிந்தேன். அவன் பெருமையையும் அருளையும் எளிமையும் அழகையும் கண்டு பித்தனானேன்.

29. பேயரே எனக்கு யாவரும்; யானும் ஓர்
பேயனே எவர்க்கும்; இது பேசி என்
ஆயனே! அரங்கா என்று அழைக்கின்றேன்;
பேயனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே.

உலகத்தாரனைவரும் என் வரைக்கும் பைத்தியக்காரர்களே. எல்லாருக்கும் பைத்தியக்காரன் நான். விரித்துப் பேசி என்ன பயன்? 'கோவலா! அரங்கா!' என்று கூப்பிடுகின்றேன். எம்பெருமானிடம் பைத்தியம் ஆனேன் என்கிறார்.

30. அங்கை-ஆழி அரங்கள் அடியிணை
தங்கு சிந்தைத் தனிப் பெரும் பித்தனாய்க்
கொங்கர்கோன் குலசேகரன் சொன்ன சொல்
இங்கு வல்லவர்க்கு ஏதம் ஒன்று இல்லையே.

அழகிய கையில் திருவாழியை ஏந்திய அரங்கனின் திருவடிகளில் மனமுடைய, அன்புடைய, சேரன் குலசேகரன் பாடல்களைக் கற்றவர்களுக்கு உலகில் எந்த இடையூறும் ஏற்படாது என்று இப்பாசுரம் முடிகிறது.

## திருவேங்கட மலையின் சம்பந்தம் வேண்டல்

31. ஊன்ஏறு செல்வத்து உடற்பிறவி யான் வேண்டேன்.
ஆனேறு ஏழ் வென்றான் அடிமைத் திறம் அல்லால்;
கூன்ஏறு சங்கம் இடத்தான் தன் வேங்கடத்துக்
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே.

ஏழு எருதுகளை வென்றவனுக்கு அடிமை செய்வதை அல்லால், உடல் வளர்ந்து தடிக்கும் செல்வ வாழ்வை நான் விரும்பேன். வளைந்த வலம்புரியை இடக்கையிலே உடையவனின் திருவேங்கடமலை ஏரியில் வாழும் நாரையாகப் பிறக்கக் கடவேன் என்று விரும்புகிறார்.

32. ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற் சூழ
வான்ஆளும் செல்வமும் மண்-அரசும் யான் வேண்டேன்;
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதி உடையேன் ஆவேனே.

அழியாத செல்வமுடைய அரம்பையர் சூழ்ந்திருக்க, விண்ணரசும் மண்ணரசும் நான் விரும்பமாட்டேன். தேன் மலர்ச் சோலை திருவேங்கடமலைச் சுனையிலே மீனாகப் பிறக்கும் பேறு உடையவனாகக் கடவேன் என்கிறார்.

33. பின்இட்ட சடையானும் பிரமனும் இந்திரனும்
துன்னிட்டுப் புகல் அரிய வைகுந்த நீள் வாசல்,
மின் வட்டச் சுடர் - ஆழி வேங்கடக்கோன் தான் உமிழும்
பொன்-வட்டில் பிடித்து உடனே புகப் பெறுவேன் ஆவேனே.

சிவனம் பிரமனும் இந்திரனும் நெருங்கி உள்புக முடியாத வைகுந்தமாகிற திருமலைத் திருவாசலிலே மின் வளையம்போல் ஒளிச் சக்கரமுடைய திருமலையான் வாய்நீர் உமிழ்கின்ற தங்க வட்டிலைக் கையில் ஏந்தி, நான் உள்ளே புகும் பேறு பெறக் கடவேன்.

34. ஒண்பவள வேலை உலவு தண் பாற்கடலுள்
கண்துயிலும் மாயோன் கழலிணைகள் காண்பதற்கு,
பண்பகரும் வண்டினங்கள் பண் பாடும் வேங்கடத்துச்
செண்பகமாய் நிற்கும் திரு உடையேன் ஆவேனே.

ஒளிப் பவளங்கள் கொண்டு உலாவுகின்ற குளிர்ந்த திருப்பாற்கடலிலே கண்வளரும் எம்பெருமானின் இருதிருவடிகளைக் கண்டின்புற, இன்னிசை வண்டுகள் பாடும் திருமலையிலே செண்புகப்பூவாய் இருக்கும் சிறப்பினை நான் பெறக் கடவேன்.

35. கம்பமத யானைக் கழுத்தகத்தின்மேல் இருந்து
இன்பு அமரும் செல்வமும் இவ் அரசும் யான் வேண்டேன்;
எம்பெருமான் ஈசன் எழில் வேங்கட மலைமேல்
தம்பகமாய் நிற்கும் தவம் உடையேன் ஆவேனே.

மதங்கொண்ட யானைக் கழுத்தின் மீது பெருமையுடன் வீற்றிருந்து, எல்லா நலனும் நுகரும் செல்வமும் அரசாட்சியையும் நான் விரும்பேன். எம்பெருமானுடைய அழகிய திருமலையிலே புதராய்ச் செழிக்கும்படியான பேறுடையவனாகக் கடவேன்.

36. மின்அனைய நுண்ணிடையார் உருப்பசியும் மேனகையும்
அன்னவர்தம் பாடலொடும் ஆடல் அவை ஆதரியேன்
தென்னஎன வண்டினங்கள் பண் பாடும் வேங்கடத்துள்
அன்னனைய பொற்குவடு ஆம் அருந்தவத்தேன் ஆவேனே.

மின்னல் நுண் இடையுடைய ஊர்வசி, மேனகையின் ஆடல் பாடலை நான் விரும்பவில்லை. "தென்னதெனன" என்று வண்டுகள் இசைக்கும் திருமலையிலே ஒரு கொடு முடியாய் மேலான தவத்தை உடையவனாகக் கடவேன். காட்டுத் தீயில் புதர் எரிந்து விடுமாதலில், கல்லாக மலைமேல் இருக்க விரும்புகிறார்.

37. வான்ஆளும் மா மதி போல் வெண் குடைக்கீழ் மன்னவர்தம்
கோன்ஆகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வு அறியேன்;
தேன்ஆர் பூஞ்சோலைத் திருவேங்கட மலைமேல்
கானாறாய்ப் பாயும் கருத்து உடையேன் ஆவேனே.

முழு நிலவு போன்ற வெண்கொற்றக் குடையின் நிழலில் இருந்து கோவேந்தர் செல்வத்தை நான் ஒரு பொருளாய் பொருட்படுத்தேன். தேன் மலர்ச் சோலையுடைய திருமலையில் ஒரு காட்டாறாய்ப் பாயும் கருத்தை உடையவனாக ஆவேன் என்று விரும்புகிறார்.

38. பிறை ஏறு சடையானும் பிரமனும் இந்திரனும்
முறையாய பெரு வேள்விக் குறை படைப்பான் மறை ஆனான்;
வெறியார் தண் சோலைத் திருவேங்கட மலைமேல்
நெறியாய்க் கிடக்கும் நிலை உடையேன் ஆவேனே.

இளம்பிறை ஏந்திய சிவனும் பிரமனும் இந்திரனும் செய்யும் தக்க யாகங்களின் விருப்பங்களை நிறைவு செய்யும் மறையவனின் எம்பெருமானின் மணமிக்க குளிர் சோலைத் திருவேங்கடமலை மேல் வழியாய்க் கிடக்கின்ற நிலையை உடையேனாகக் கடவேன் என்கிறார்.

39. செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே!
நெடியானே வேங்கடவா! நின் கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்து இயங்கும்
படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே.

செடிபோல் அடர்ந்த தீவினைகளைத் தீர்க்கும் திருமாலே! பெரியோனே! திருவேங்கடவனே! உன் கோயிலின் வாயிலிலே தொண்டர்களும், தேவர்களும், அணங்குகளும் இடை விடாது

இயங்கப் பெற்ற படியாய்ப் இருந்து உன் பவளத் திருவிதழ்களைக் காண்பேன் என்கிறார்.

முன்பாட்டில் வழியாய் இருக்க விரும்பினர். வழிகள் மாறலாம். எனவே உன் கோயிலின் உள் வாயிற் படியாய் அமைவேன் என்கிறார். இதனால் திருமால் கோயில்களில் கருவறைப்படி குலசேகரப் படி எனப்படுகிறது.

40. உம்பர் உலகு ஆண்ட ஒருகுடைக்கீழ் உருப்பசிதன்
அம்பொற் கலை அல்குல் பெற்றாலும் ஆதரியேன்;
செம் பவள-வாயான் திருவேங்கடம் என்னும்
எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனும் ஆவேனே.

மேலுலகை ஒரு கொற்றக்குடையின் நிழலில் அரசாண்டு, ஊர்வசியின் கூடலைப் பெறினும் விரும்பமாட்டேன். சிவந்த பவள வாயுடைய எம் அப்பன் திருவேங்கடமலை மேலே ஏதேனுமொரு பொருளாகப் பிறக்கக் கடவேன்.

41. மன்னிய தண் சாரல் வட வேங்கடத்தான் தன்
பொன் இயலும் சேவடிகள் காண்பான் புரிந்து இறைஞ்சிக்
கொல் நவிலும் கூர்வேற் குலசேகரன் சொன்ன
பன்னிய நூற் தமிழ்-வல்லார் பாங்காய பத்தர்களே.

கூர்மையான வேலையுடைய குலசேகராழ்வார், மாறாக் குளிர் சாரல் வடவேங்கட மலையில் எழுந்துள்ள பெருமானது திருவடிகளைத் தொழுது செய்த தமிழ்ப் பதிகத்தைக் கற்றுவல்லர், பெருமான் திருவுள்ளத்துக்கு இனியராவர்.

இப்பாடலில் திருமொழியைப் பாடுவோர் சிறந்த அடியார்களாக ஆவார்கள் என்று பலன் கூறி முடிக்கிறார்.

# வித்துவக்கோட்டு அம்மானையே வேண்டி நிற்றல்

42. தருதுயரம் தடாயேல் உன் சரண் அல்லால் சரண் இல்லை;
விரை குழுவு மலர்ப் பொழில் சூழ் வித்துவக்கோட்டு அம்மானே!
அரிசினத்தால் ஈன்ற தாய் அகற்றிடினும் மற்று அவள்தன்
அருள் நினைந்தே அழும் குழவி; அதுவே போன்று இருந்தேனே.

நறுமலர்ச் சோலை சூழ்ந்த வித்துவக்கோட்டில் வாழ்பெரும! தரும் துன்பத்தை நீயே போக்கிட உன் திருவடி அன்றி வேறு புகலில்லை. பெற்ற தாய் சினத்தால் தன் குழந்தையை வெறுத்துத் தள்ளினாலும், அத்தாயின் கருணை கருதி அழும் குழந்தையை ஒத்திருந்தேன் என்கிறார்.

43. கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும்
கொண்டானை அல்லால் அறியாக் குலமகள் போல்,
விண் தோய் மதில் புடை சூழ் வித்துவக்கோட்டு அம்மா! நீ
கொண்டாளாயாகிலும் உன் குரைகழலே கூறுவனே.

மதில்கள் சூழ்ந்த வித்துவக்கோட்டையா! கண்டவர் இகழும் கணவனாயினும், தன்னை மணம் புரிந்த கணவனையன்றி வேறொருவரை நினையாக் குலத்துதித்த பெண்போல், என்னை அடிமை கொண்ட நீ என்னைக் காக்கவில்லையானாலும், உன் திருவடிகளையே புகஷ்டைவேன் என்கிறார்.

44. மீன்நோக்கும் நீள் வயல் சூழ் வித்துவக்கோட்டு அம்மா! என்-
பால்நோக்காயாகிலும் உன் பற்று அல்லால் பற்று இலேன்;
தானநோக்காது எத்துயரம் செய்திடினும் தார்-வேந்தன்
கோல்நோக்கி வாழும் குடி போன்று இருந்தேனே.

மீன்கள் உலவும் வயல் சூழ்ந்த வித்துவக்கோட்டம்மா! என்மீது நோக்கம் இல்லாயினும் உன்னை விட்டு வேறொரு வரைப் பற்றேன். அரசன் தானே குடிகளைக் காவாமல் துயர் செய்யினும், செங்கோலையே பார்த்து வாழும் மக்களை ஒத்திருக்கின்றேன்.

45. வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்
மாளாத காதல் நோயாளன் போல், மாயத்தால்
மீளாத் துயர்தரினும் வித்துவக்கோட்டு அம்மா! நீ,
ஆளா உனது அருளே பார்ப்பன் அடியேனே.

வித்துவக்கோட்டம்மா! கத்தியாலே கட்டியை அறுத்துச் சுட்டிடுனும், மருத்துவனிடத்தில் நீங்காத அன்புடைய நோயாளி போல் நீ மாயையால் எனக்கு நீங்காத துன்பம் தந்தாலும், உனக்கு அடிமையாய் உன் கருணையையே நோக்கியிருப்பேன் என்று இரஞ்சுகின்றார்.

46. வெங்கண்-திண்களிறு அடர்த்தாய்! வித்துவக்கோட்டு அம்மானே!
எங்குப் போய் உய்கேய்? உன் இணையடியே அடையல்
அல்லால் எங்கும் போய்க் கரை காணாது எறிகடல்வாய் மீண்டு
ஏயும் வங்கத்தின் கூம்பு ஏறும் மாப் பறவை போன்றேனே.

வலிய யானையைக் கொன்றவ! வித்துக்கோட்டமானே! உன் திருவடியே அடைவதல்லாமல் வேறு யாரிடம் போவேன்? அலை கடலில் பாய்மரத்தனின்றும் பறந்து சென்று, கரை காணாமல் மீண்டும் அம்மரத்தின் மீது இருக்கும் பறவையை ஒத்திருந்தேன் என்கிறார்.

47. செந்தழலே வந்து அழலைச் செய்திடினும் செங்கமலம்
அந்தரம் சேர் வெங்கதிரோற்கு அல்லால் அலராவால்;
வெந்துயர் வீட்டாவிடினும் வித்துவக்கோட்டு அம்மா! உன்
அந்தமிழ் சீர்க்கு அல்லால் அகம் குழைய மாட்டேனே.

விண்ணில் ஒளிரும் செங்கதிருக்குச் செந்தாமரை மலருமே யல்லாது செந்நெருப்புக்கு மலராது. வித்துவக்கோட்டம்மா! என் கொடிய துயர்களை நீ போக்காவிடினும், உன் எல்லையில்லா அருட்குணங்களுக் கல்லால் மற்றொன்றுக்கு நான் நெஞ்சுருகமாட்டேன் என்கிறார்.

48. எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள்
மைத்து எழுந்த மா முகிலே பார்த்திருக்கும்; மற்று அவைபோல்
மெய்த் துயர் வீட்டாவிடினும் வித்துவக்கோட்டு அம்மா! என்
சித்தம் மிக உன்பாலே வைப்பன் அடியேனே.

வித்துவக்கோட்டம்மா! விசும்பினின்றும் மழை பொய்ப்பினும் பசும் பயிர்கள் கருமுகிலையே பார்த்திருக்கும். பயிர்களைப் போல் துன்பங்களை நீ போக்காவிட்டாலும் நான் என் மனத்தை உன்னிடத்திலேயே மிகவும் செலுத்துவேன் என்கிறார்.

49. தொக்கு இலங்கி யாறெல்லாம் பரந்தோடித் தொடுகடலே
புக்கு அன்றிப் புறம்நிற்க மாட்டாத; மற்று அவை போல்,
மிக்கு இலங்கு முகில்-நிறத்தாய்! வித்துவக்கோட்டு அம்மா! உன்

புக்கு இலங்கு சீர் அல்லால் புக்கிலன் காண், புண்ணியனே!

ஆறுகளெல்லாம் பரவியோடி ஆழ்கடலிலே சேர்ந்தல்லது வேறிடம் போய்ச் சேரமாட்டா. காளமுகில் நிற வித்துவக் கோட்டம்மா! அவ் ஆறுகளைப்போல் என் மனத்தில் புகுந்து மிளிர்கின்ற உனது நற்குணங்களில் அன்று வேறு எதிலும் ஆழ்ந்திடேன் என்கிறார்.

50. நின்னையே தான் வேண்டி, நீள் செல்வம் வேண்டாதான்
தன்னையே தான் வேண்டும் செல்வம்போல், மாயத்தால்
மின்னையே சேர் திகிரி வித்துவக்கோட்டு அம்மானே!
நின்னையே தான் வேண்டி நிற்பன் அடியேனே.

மின்னொளி சேர் ஆழியுடைய வித்துவக்கோட்டம்மா! உன்னையே விரும்பி, மிக்க செல்வத்தை விரும்பாதவனையே சேர விரும்புகிற செல்வத்தைப்போல், உன் மாயையினால் நீ என்னை ஏற்காவிட்டாலும், அடியேன் நான் உன்னையே அடைய விரும்புவேன்.

51. வித்துவக்கோட்டு அம்மா! நீ வேண்டாயே ஆயிடினும்
மற்று ஆரும் பற்று இலேன் என்று அவனைத் தாள் நயந்து
கொற்ற வேல்-தானைக் குலசேகரன் சொன்ன
நற்றமிழ் பத்தும் வல்லார் நண்ணார் நரகமே.

வித்துவக்கோட்டம்மா! நீ என்னை விரும்பாதாபோதிலும் வேறு எவரையும் புகலடைய மாட்டேனென்று உறுதியுடன் குலசேகராழ்வார் பாடிய தமிழ்ப் பாடல்களைக் கற்றவர்கள் நரகடைய மாட்டார்.

## கன்னியர் ஊடிக் கண்ணனை என்குதல்

52. ஏர் மலர்ப் பூங்குழல் ஆயர் மாதர்
    எனைப் பலர் உள்ள இவ் ஊரில் உன்தன்
மார்வு தழுவுதற்கு ஆசையின்மை
    அறிந்தறிந்தே உன்தன் பொய்யைக் கேட்டு
கூர் மழை போல் பனிக் கூதல் எய்திக்
    கூசி நடுங்கி யமுனை யாற்றில்
வார் மணற் குன்றிற் புலர நின்றேன்
    வாசுதேவா! உன் வரவு பார்த்தே.

வாசுதேவா! அழகிய மணமலர் அணிந்த கூந்தலையுடைய இடைப்பெண்கள் எத்தனையோபேர் உள்ள திருவாய்ப் பாடியில், உன் திருமார்பை அணைவதற்கான ஆசை பயன்படாமையை அறிந்து வைத்தும், உன் பொய்மொழி கேட்டுப் பெரிய மழையைப்போல் பெய்கிற பனிக்குளிரிலே அகப்பட்டு; "யார் பார்த்துவிடுகிறார்களோ!" எனக் கூசி, பயத்தினால் குளிரினால் நடுங்கி, யமுனை மணல்மேட்டில் உன் வருகையை எதிர்பார்த்து விடியுமளவும் நின்றிருந்தேன் என்கிறார்.

53. கெண்டை ஒண் கண் மடவாள் ஒருத்தி
கீழை அகத்துத் தயிர் கடையக்
கண்டு, ஒல்லை நானும் கடைவன் என்று
கள்ள-விழியை விழித்துப் புக்கு,
வண்டு அமர் பூங்குழல் தாழ்ந்து உலாவ,
வாள்முகம் வேர்ப்ப, செவ்வாய் துடிப்பு,
தண் தயிர் நீ கடைந்திட்ட வண்ணம்
தாமோதரா! மெய் அறிவன் நானே.

தாமோதரா! கீழண்டை வீட்டில் கயல்மீன் கண்ணழகி, தனியே தயிர் கடைவதைப் பார்த்து, "நானும் உன்கூட விரைந்து கடைந்து தருவேன்" என்று சொல்லித் திருட்டுப் பார்வை பார்த்து, அவளருகே சென்று, வண்டுகள் படிந்த மலர் அணிந்த கூந்தல்கீழாகத் தாழ்ந்து அசையவும், ஒளி பொருந்திய முகம் வேர்க்கவும், சிவந்த உதடுகள் துடிக்கவும், குளிர்ந்த தயிரை நீ கடைந்ததை நான் உண்மையாகவே அறிவேன்.

54. கருமலர்க் கூந்தல் ஒருத்திதன்னைக்
கடைக்கணித்து, ஆங்கே ஒருத்திதன்பால்
மருவி மனம் வைத்து, மற்றொருத்திக்கு
உரைத்து, ஒரு பேதைக்குப் பொய் குறித்து,
புரிகுழல் மங்கை ஒருத்திதன்னைப்
புணர்தி; அவளுக்கும் மெய்யன் அல்லை.
மருது இறுத்தாய்; உன் வளர்த்தியூடே
வளர்கின்றதால் உன்தன் மாயை தானே.

மலர் அணிந்துள்ள கருமயிர்க் கூந்தலினாள் ஒருத்தியைக் கடைக்கண்ணால் பார்த்துவிட்டு, வேறொரு பெண்ணினிடம் மனத்தைப் பொருந்துவிட்டுப், பேதைப் பெண்ணுக்கு, 'உன் அடிமை

நான்' என்று சொல்லி, மடந்தை ஒருத்திக்கு, 'இன்ன விடத்திலே எனக்காகக் காத்திரு' என்று பொய்யாக இடத்தைக் குறித்து, மற்றோர் இளம்பெண்ணோடு கூடி நின்றாய். அந்தப் பெண்ணுக்கும் நீ மெய்யானாகமாட்டாய். மருத மரங்களை முரித்தவனே! உன் வயது வளர்வதுடன் கள்ளத்தனமும் வளர்ந்து வருகின்றதே! என்கிறார்.

55. தாய்-முலைப் பாலில் அமுதிருக்கத்
தவழ்ந்து தளர்நடையிட்டுச் சென்று
பேய்-முலை வாய்வைத்து நஞ்சை உண்டு
பித்தன் என்றே பிறர் ஏற நின்றாய்;
ஆய்மிகு காதலோடு யான் இருப்ப,
யான் விட வந்த என் தூதியோடே
நீ மிகு போகத்தை நன்கு உகந்தாய்;
அதுவும் உன் கோரம்புக்கு ஏற்கும் அன்றே.

தாய் யசோதை முலையிலே பால் இருக்க, அதனை உண்ணாமல், தவழ்ந்து தட்டுத் தளர் நடையாகச் சென்று, பேய் முலையிலே வாய் வைத்து நச்சுப் பால் உண்ட பித்தனென்று ஊரார் ஏசும்படி நின்றவனே! நான் மிகவும் அதிகமான அன்புடன் இருக்க, நீ தூது அனுப்பப்பட்டு வந்த என் வேலைக்காரியுடன் மிகுந்த இன்பத்தை நன்றாக நுகர்ந்தாய். அச்செய்கையும் உனது துடுக்கிற்குத் தகுதியாய் இருக்கிறதல்லவா? என்று எள்ளுகிறார்.

56. மின்னொத்த நுண்ணிடையாளைக் கொண்டு
வீங்கு இருள்வாய் என்தன் வீதியூடே
பொன்னொத்த ஆடை குக்கூடலிட்டுப்
போகின்ற போது, நான் கண்டு நின்றேன்;
கண்ணுற்றவளை நீ கண்ணாலிட்டுக்
கை விளிக்கின்றதும் கண்டே நின்றேன்;
என்னுக்கு அவளை விட்டு இங்கு வந்தாய்?
இன்னம் அங்கே நட, நம்பி! நீயே.

மிக்கல் இடையுடைய ஒரு பெண்ணை அணைத்துக் கொண்டு, மிக்க இருளிலே பொன்னாடையாலே முட்டாக்கிட்டு, என் வீதியில் அவளும் நீயுமாகப் போகும்போது நான் பார்த்துக் கொண்டிருந்தேன். மேலும் கண்ணில் பட்ட வேறொரு பெண்ணை உனக்காம்படிக் கண்சாடை காட்டி வாவென்று கையால் அழைத்ததையும் பார்த்துக்

கொண்டுதான் இருந்தேன். ஒன்றுமறியாப் பெண்ணைவிட்டு என்னிடம் எதற்காக வந்தாய்? இனி அவளிடத்திற்கே போ.

57. மற் பொரு தோள் உடை வாசுதேவா!
வல்வினையேன் துயில் கொண்டவாறே
இற்றை இரவிடை ஏமத்து என்னை
இன்னணைமேல் இட்டு அகன்று நீ போய்,
அற்றை இரவும், ஓர் பிற்றை நாளும்
அரிவையரோடும் அணைந்து வந்தாய்;
எற்றுக்கு நீ என் மருங்கில் வந்தாய்?
எம்பெருமான்! நீ எழுந்தருளே.

மல்லர்களுடன் போர்செய்த தோளுடைய வாசுதேவா! பாபியான நான் உறங்கத் தொடங்கினவுடன், அன்றிரவு நள்ளிருளிலே இனிய படுக்கையிலே என்னைப் படுக்கவிட்டு, நீ விலகிப்போய், அன்றிரவும் அதற்கு மறுநாளும் எல்லாப் பெண்களோடும் இன்பம் துய்த்து வந்தாய். இப்படிப்பட்ட நீ என் அருகே எதற்காக வந்தாய்? என் நாயகனே! அப்பால் எழுந்து போனால் நல்லது.

58. பையரவின் அணைப் பள்ளியினாய்!
பண்டையோம் அல்லோம்; நாம் நீ உகக்கும்
மையரி ஒண் கண்ணினாரும் அல்லோம்;
வைகி எம் சேரி வரவு ஒழி நீ.
செய்ய உடையும் திருமுகமும்
செங்கனிவாயும் குழலும் கண்டு
பொய் ஒரு நாள் பட்டதே அமையும்;
புள்ளுவம் பேசாதே போகு, நம்பீ!

படங்களையுடைய பாம்பணையில் பள்ளி கொள்பவனே! நாங்கள் உன் மாயப் பேச்சில் பழையபடி ஏமாந்தவர்களல்லர். நீ விரும்பத்தக்க மை அணிந்து ஒளி விழி மாதர்களும் அல்லோம். அகாலத்தில் எம் இருப்பிடத்திற்கு வருவதை ஒழி. அழகிய பொன்னாடையும் திருமுகமும் கோவைக்கனி உதடுகளையும் எழில் முடியையும் பார்த்து, உன் பொய்யான மொழிகளை மெய்யென நம்பி, முன் ஒரு நாள் பட்டபாடு போதும். வஞ்சக மொழிகளை மீண்டும் சொல்லாமல் இவ் இடத்தை விட்டுப் போ.

59. என்னை வருக எனக் குறித்திட்டு,
இனமலர் முல்லையின் பந்தர்-நீழல்
மன்னி அவளைப் புணரப் புக்கு,
மற்று என்னைக் கண்டு உழறா நெகிழ்ந்தாய்;
பொன்னிற ஆடையைக் கையிற் தாங்கிப்
பொய் அச்சம் காட்டி நீ போதியேலும்,
இன்னம் என் கையகத்து ஈங்கு ஒரு நாள்
வருதியேல், என் சினம் தீர்வன் நானே.

என்னை இன்ன இடம் வாவென்று இடம் குறித்துப் பின், நிறைந்த மலர் முல்லைப் பந்தலின் நிழலிலே வெகு காலமாய்ப் பதுங்கி நின்ற ஒருத்தியை அணைவதற்குப் போய், பிறகு என்னைப் பார்த்துத் கலங்கி அப்பாலே நழுவினாய்; பொன்னாடையைக் கையிலே தாங்கி எனக்கு அஞ்சியதாகப் பொய்யாக நடித்து, நீ என் கைக்குத் தப்பிப் போனபோதிலும் இனிமேல் இங்கு என்னிடத்திற்கு ஒரு நாளாகிலும் வருவாயாகில் நான் என் சீற்றத்தைத் தீர்த்துக்கொள்வேன்.

60. மங்கலநல் வனமாலை மார்வில்
இலங்க, மயில்-தழைப் பீலி சூடி,
பொங்குஇள ஆடை அரையிற் சாத்தி,
பூங்கொத்துக் காதிற் புணரப் பெய்து,
கொங்குநறுங் குழலார்களோடு
குழைந்து குழல் இனிது ஊதி வந்தாய்;
எங்களுக்கே ஒருநாள் வந்து ஊத
உன் குழலின் இசை போதராதே?

மங்களமாய் அழகிய துழய்மாலை திருமார்பிலே விளங்கத், தழைத்த மயில் இறகினை முடியிலே சூடிக்கொண்டு, மெல்லிய ஆடையைத் திருவரையில் உடுத்திக்கொண்டு, பூங்கொத்துகளைக் காதிலே பொருந்த அணிந்துகொண்டு, தேன் மணம் கமழ்கின்ற கூந்தலையுடைய மகளிரோடே கலந்து, அம் மகிழ்ச்சியால் புல்லாங்குழலை மனங்கவர ஊதிக்கொண்டு வந்தாய். ஒரு நாளாகிலும் எங்களுக்காக வந்து ஊதினால் உன் குழலின் இசை பொங்காதோ?

61. அல்லி மலர்த் திருமங்கை கேள்வன்
தன்னை நயந்து இள ஆய்ச்சிமார்கள்
எல்லிப் பொழுதினில் ஏமத்து ஊடி
எள்கி உரைத்த உரையதனைக்

கொல்லி நகர்க்கு இறை கூடற்கோமான்
குலசேகரன் இன்னிசையில் மேவிச்
சொல்லிய இன் தமிழ் மாலை பத்தும்
சொல்ல வல்லார்க்கு இல்லை துன்பந் தானே.

இளமை கூடிய இடைப்பெண்கள், திருமகள் நாயகன் கண்ணனை ஆசைப்பட்டு நள்ளிரவிலே பிணங்கிச் சொன்ன மொழிகளைக் கொல்லி நகர் அரசர் மதுரைக்கு அதிபதி குலசகேரர் பண்ணிலே அருளிச்செய்த இனிய தமிழ் மாலை பத்துப் பாட்டையும் சொல்ல வல்லவர்க்குத் துன்பம் அணுகாது.

## தேவகியின் புலம்பல்

கண்ணனின் பிள்ளைத் திருவிளையாடல்களைக் கண்டு களிக்கும் போது, ஆயர்பாடி யசோதை பிராட்டியார்க்கு வாய்த்தது போலத் தனக்கு வாய்க்காமையை நினைத்துப் பெற்ற தாயான தேவகிப் பிராட்டியார் அப் பெருமானைக் கண்டபோது கழிவிரக்கத்தோடு கூடிய பேச்சாகப் புலம்பி மொழிந்த போக்கில் அமைந்துள்ளன இத்திருமொழிப் பாசுரங்கள். இவை தாலாட்டுப் பாட்டு (தாலப் பருவம்) என்ற அமைப்பில் அமைந்துள்ளன.

62. ஆலை நீள் கரும்பு அன்னவன் தாலோ!
அம்புயத் தடங் கண்ணினன் தாலோ!
வேலை நீர் நிறத்து அன்னவன் தாலோ!
வேழப் போதகம் அன்னவன் தாலோ!
ஏல வார் குழல் என்மகன் தாலோ!
என்று என்று உன்னை என் வாயிடை நிறையத்
தால் ஒலித்திடும் திருவினை இல்லாத்
தாயரிற் கடை ஆயின தாயே.

ஆலைக் கரும்பு போன்றவனே! தாமரைப் பூவைப் போலே பெரிய திருக்கண்களை உடையவனே! தாலேலோ! கடல் நீரைப் போன்ற நிறத்தை உடையவனே! தாலேலோ! யானைக்கன்று போன்ற செயல்களை உடையவனே! தாலேலோ! மணம் மிக்க நீண்ட திருக்குழலையுடைய என் மகனே! தாலேலோ! என்று பலமுறை சொல்லி என் வாய் மகிழும்படி உன்னைத் தாலாட்டும்படியான

செல்வம் இல்லாத தாய்மாரில் கடையான தாயாய் நான் இருக்கிறேனே என்று தேவகி புலம்பினாள்.

63. வடிக் கொள் அஞ்சனம் எழுது செம் மலர்க்கண்
மருவி மேல் இனிது ஒன்றினை நோக்கி
முடக்கிச் சேவடி மலர்ச் சிறு கருந்தாள்
பொலியும் நீர்-முகிற் குழவியே போல,
அடக்கியாரச் செஞ் சிறு விரல் அனைத்தும்
அங்கையோடு அணைந்து, ஆனையிற் கிடந்த
கிடக்கை கண்டிடப் பெற்றிலன், அந்தோ!
கேசவா! கெடுவேன், கெடுவனே!

கூரிய மையுண்ட, செந்தாமரைக் கண்களாலே மேற்கட்டியிலே தொங்கும் ஒரு விளையாட்டுப் பொருளை இனிதாகப் பார்த்துக்கொண்டு, கறுத்த புறந்தாளையும் செந்தாமரையை யொத்த உள்ளங்காலையும் முடக்கிக்கொண்டு, கழுத்தளவும் நீரைப் பருகி விளங்குகிற மழைக்கன்றைப் போல் அழகிய சிறு விரல்கள் எல்லாம் உள்ளங்கையிலே அடங்க மடித்துப் பிடித்துக்கொண்டு, ஆனை கிடைக்குமா போல் உறங்கும் அழகைப் பார்த்துவக்கப் பெற்றிலேன். ஐயோ! குழலழகனே! நான் கொடுத்து வைக்காதவள்! ஒன்றும் துய்க்கப் பெறாத பெரும் பாவியானேன் என்று புலம்பினாள்.

64. முந்தை நன்முறை அன்பு உடை மகளிர்
முறை முறை தம் தம் குறங்கிடை இருத்தி,
எந்தையே! என்தன் குலப் பெருஞ் சுடரே!
எழு முகில் கணத்து எழில் கவர் ஏறே!
உந்தை யாவன் என்று உரைப்பு, நின் செங்கேழ்
விரலினும் கடைக்கண்ணிலும் காட்ட
நந்தன் பெற்றனன்; நல்வினை யில்லா
நங்கள்கோன் வாசுதேவன் பெற்றிலனே.

அன்புடைய நல்ல உறவு முறையையுடைய பெண்கள் தங்கள் தொடைகளிலே முறைப்படி வைத்துக்கொண்டு, "என் அப்பனே! எங்கள் குல விளக்கே! நீரை முகந்தும் விசும்பின் அழகைக்கவர்ந்த காளை!" என்று துதித்து, 'உன் தகப்பனார் யார்? காட்டு'என்றவுடன் நீ உன்னுடைய சிவந்த விரலால் கடைக்கண்ணால் காண்பித்ததை, நந்தகோபர் பெற்றார். என் கணவர் வாசுதேவர் பெறவில்லையே!

என்கிறாள்.

65. களிநிலா எழில் மதிபுரை முகமும்,
கண்ணனே! திண்கை மார்வும், திண்தோளும்,
தளிர்மலர்க் கருங் குழல் பிறையதுவும்,
தடங்கொள் தாமரைக் கண்களும் பொலிந்த
இளமை-இன்பத்தை இன்று என்தன் கண்ணால்
பருகுவேற்கு இவள் தாயென நினைந்த
அளவில் பிள்ளைமை - இன்பத்தை இழந்த
பாவியேன் எனது ஆவி நில்லாதே.

கண்ணனே! மகிழ்வைத் தரும் முழு நிலாவை ஒத்த திருமுகமும், வலிமை பொருந்திய கைகளும், மார்பும், பலம் மிக்க தோள்களும் இளந் தளிரையும் மலர்களையுமுடைய கறுத்த திருக்குழலின் கீழ் விளங்கும் மூன்றாம் பிறை நெற்றியும், தாமரைக் கண்களும் இளமையின் அழகை இப்போது என் கண்களாலே பருகிக்கொண்டிருக்கும் எனக்கு, 'இவள் என் தாய்'என்பதை மட்டும் அறியும்படியான குழவிப் பருவத்தில் உண்டான இன்பத்தைச் சிறிதும் நுகராத பாவியான என்னுடைய ஆவி நிற்காது என்றாள்.

66. மருவும்நின் திருநெற்றியிற் சுட்டி
அசைதர, மணிவாயிடை முத்தம்
தருதலும், உன்தன் தாதையைப் போலும்
வடிவு கண்டுகொண்டு உள்ளம் உள் குளிர,
விரலைச் செஞ் சிறுவாயிடைச் சேர்த்து
வெகுளியாய் நின்று உரைக்கும் அவ் உரையும்
திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன்; எல்லாம்
தெய்வ நங்கை யசோதை பெற்றாளே.

உன் திருநெற்றியில் விளங்கும் சுட்டி அலைய, உன் அழகிய வாயினால் முத்தம் கொடுப்பதுவும், அப்போது உன் தந்தையைப் போன்ற உன் அழகை, நான் உள்ளத்துள்ளே உவந்து குளிரவும், நீ உன் சிவந்த சிறிய வாயிலே விரல்களை நுழைத்துச் சீற்றத்தோடே பேசும் மழலைச் சொல்லையும் ஒன்றையும் நான் துய்க்கவில்லை; இவற்றைத் தெய்வமாது யசோதை, அந்த மயக்குறு செயல்களை முழுவதும் நுகரப் பெற்றாள்! என்றாள்.

67. தண்அந் தாமரைக் கண்ணனே! கண்ணா!
தவழ்ந்து எழுந்து தளர்ந்ததோர் நடையால்
மண்ணிற் செம்பொடி ஆடி வந்து என்தன்
மார்வில் மன்னிடப் பெற்றிலேன்; அந்தோ!
வண்ணச் செஞ்சிறு கைவிரல் அனைத்தும்
வாரி வாய்க்கொண்ட அடிசிலின் மிச்சில்
உண்ணப் பெற்றிலேன்; ஓ கொடு வினையேன்!
என்னை என் செய்யப் பெற்றது எம் மோயே!

குளிர் தாமரைக் கண்ணா! கண்மணியே! நீ தவழ்ந்து எழுந்திருந்து தளர் நடையினால் சிவந்த புழுதி மண்ணிலே விளையாடி வந்து, என் மார்பிலே அணையும்படியான பேற்றினை அடைந்திலேன். என்னை என் போகூழ் (தீவினை)! குறுகுறு நடந்து சிறுகை நீட்டி திருவிரல்கள் இட்டும் தொட்டும் வாரி அமுது செய்த அடிசிலின் மிச்சத்தை நான் உண்ணப் பெறவில்லை. ஐயோ! என் தாய் என்னை வீணே ஏதுக்காகப் பெற்றாளோ? என்று கழிவிரக்கத்தோடு புலம்பினாள்.

68. குழகனே! என்தன் கோமளப் பிள்ளாய்!
கோவிந்தா என் குடங்கையில் மன்னி,
ஒழுகுபேர் எழில் இளஞ்சிறு தளிர்போல்
ஒரு கையால் ஒரு மலை-முகம் நெருடா,
மழலை மென்னகை இடையிடை அருளா,
வாயிலே முலை இருக்க, என் முகத்தே
எழில்கொள் நின் திருக் கண்ணிணை நோக்கந்
தன்னையும் இழந்தேன், இழந்தேனே!

கொஞ்சும் எழிற்குமரா! அழகிற் சிறந்த என் குழந்தாய்! கோவிந்தனே என் கையிலே பொருந்தியிருந்து வனப்பெலாம் திரண்டு வடிவெடுத்து, மிகவும் மென்மையான சிறிய தளிரைப் போன்ற ஒரு திருக்கையாலே, ஒரு முலைக்காம்பை நெருடிக் கொண்டும், மற்றொரு முலையானது உன் திருவாயிலே இருக்கவும் நடுநடுவே என் முகத்தைப் பார்த்துப் புன்சிரிப்பாகச் சிரித்துக்கொண்டும் உன் இரண்டு திருக்கண்களாலும் பார்க்கிற பார்வையையும் ஐயோ! இழந்து போனேனே! என்றாள்.

69. முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டு உண்ணும்
முகிழ் இளஞ் சிறுத் தாமரைக் கையும்,
எழில்கொள் தாம்பு கொண்டு அடிப்பதற்கு எள்கு
நிலையும், வெண் தயிர் தோய்ந்த செவ்வாயும்,

அழுகையும், அஞ்சி நோக்கும் அந்நோக்கும்,
அணிகொள் செஞ் சிறுவாய் நெளிப்பதுவும்,
தொழுகையும்; இவை கண்ட அசோதை
தொல்லை-இன்பத்து இறுதி கண்டாளே.

வெண்ணெயைக் குடத்திலுள்ளளவும் கையினால் அளைந்து, தொட்டுத் தொட்டு உண்கிற இளந்தளிர் போன்ற தாமரைச் சிறு கைகளும், யசோதை அழகிய தாம்பாலே அடிக்கப்புக, அதற்குப் பயந்து நிற்கும் நிலையும், வெண் தயிர் ஒட்டிய சிவந்த வாயும், அழுவதும் அஞ்சிப் பார்க்கிற அந்தப் பார்வையும், அழகிய திருப்பவளவாய் நெளிப்பதும், கும்பிடுவதுமான நிலைகளைக் கண்ணாற் கண்டு வந்த யசோதை, எல்லை இல்லா இன்பத்தில் எல்லையையே காணப்பெற்றாள் என்று தேவகி மொழிந்தனள்.

70. குன்றினால் கடை கவித்ததும், கோலக்
குரவை கோத்ததுவும், குடமாட்டும்,
கன்றினால் விளவு எறிந்ததும், காலால்
காளியன் தலை மிதித்ததும், முதலா
வென்றி சேர் பிள்ளை நல் விளையாட்டம்
அனைத்திலும் அங்கு என் உள்ளம் உள்குளிர,
ஒன்றும் கண்டிடப் பெற்றிலேன்; அடியேன்,
காணுமாறு இனி உண்டெனில், அருளே.

கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்ததும், பெண்களுடன் கைகோத்தாடியதும், குடக்கூத்தாடினதும், கன்றாய் வந்த அசுரனைக் கொன்றதும், திருவடிகளாலே காளிய நாகத் தலையிலே ஆடிய சிறுபிள்ளையின் விளையாட்டுகள் எல்லாவற்றிலும் என் மனம் மகிழ்ந்து குளிரும்படி நான் திருவாய்ப்பாடியிலிருந்து காணவில்லை. இனி நான் காணும் வழி உண்டானால் தெய்வத்தின் அருளே! என்றாள்.

71. வஞ்சம் மேவிய நெஞ்சு உடைப் பேய்ச்சி
வரண்டு நார் நரம்பு எழக் கரிந்து உக்க
நஞ்சம் ஆர்தரு சுழிமுலை, அந்தோ!
சுவைத்து நீ அருள்செய்து வளர்ந்தாய்!
கஞ்சன் நாள் கவர் கருமுகில் எந்தாய்!
கடைப்பட்டேன் வறிதே முலை சுமந்து,
தஞ்ச மேல் ஒன்றிலேன் உய்ந்திருந்தேன்;
தக்கதே நல்ல தாயைப் பெற்றாயே!

வஞ்சக நெஞ்சையுடைய பூதனை உடல் தசையும் குருதியும் கொழித்துப் புறப்படும்படியாகவும், நாரும் நரம்பும் கடை பெயர்ந்து கருகி உதிரும்படியாகவும், கொல்லும் நஞ்சுடையதும், தன்னிலே அகப்படுத்தும் முலையை நீ உண்டருளி வளரப் பெற்றாய். என்னே! கம்சன் வாழ்வழித்த கார்முகில் பெரும! நான் பயன் படா முலையைச் சுமந்திடும் கெட்டவளிலும் கடை கெட்டவள். உன்னை ஒழிய வேறு புகல் அற்றவள். உன்னைக் காணவே உயிரோடியிருக்கிறேன். உனக்குத் தகுந்த நல்ல தாயை அடைந்திட்டாய் என்றாள்.

72. மல்லை மா நகர்க்கு இறையவன்தன்னை
வான் செலுத்தி வந்து ஈங்கு அணை மாயத்து
எல்லையில் பிள்ளை செய்வன காணாத்
தெய்வத் தேவகி புலம்பிய புலம்பல்
கொல்லி காவலன் மால் அடி முடிமேல்
கோலமாம் குலசேகரன் சொன்ன
நல்லிசைத் தமிழ் மாலை வல்லார்கள்
நண்ணுவார் ஒல்லை நாரணன் உலகே.

வடமதுரைக்குத் தலைவன், கம்சனை வானுலகத்திற்கு அனுப்பி, மதுரை அடைந்த தன் பிள்ளையான கண்ணனுடைய வியத்தகு செயல்களைக் காணப்பெறாத தேவகி, புலம்பிக் கொண்டு சொன்னவற்றை ஏற்று, கொல்லி நகர்க்குத் தலைவன் குலசேகராழ்வார் அருளிச் செய்த இசைத் தமிழ்ப் பாட்டுகளை ஓதவல்லவர்கள் பரமபதத்தை அடைவார்கள். இவ்வாறு இத்திருமொழி முடிகிறது.

## இராமாவதார அனுபவம்

கண்ணனின் பிள்ளையைத் திருவிளையாடல்களில் ஈடுபட்ட குலசேகரர், இராமாவதாரத்தில், நற்றாயான கோசலை பெற்ற பேற்றினையும், இராமனின் மற்ற வீரச் செயல்களையும் நினைந்து இளமைப் பருவத்தைத் தாலாட்டுவதாக இத்திருமொழிப் பாசுரங்களாகும்.

73. மன்னு புகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே!
தென் இலங்கைக் கோன் முடிகள் சிந்துவித்தாய்! செம்பொன்சேர்
கன்னி நன் மா மதில் புடைசூழ் கணபுரத்து என் கருமணியே!
என்னுடைய இன்னமுதே! இராகவனே! தாலேலோ!

அரும்புகழ்க் கோசலையின் அழகிய வயிற்றில் பிறந்தவனே! தென் இலங்கை இராவணின் தலைகளை வீழ்த்தியவனே! அழிவற்ற அழகிய பெரிய மதில் சூழ்ந்த கண்ணபுரத்தனே! கண்மணியே! அமிழ்தமே! இராகவா! உனக்குத் தாலேலோ!

74. புண்டரிக மலரதன்மேல் புவனி எல்லாம் படைத்தவனே!
திண் திறலாள் தாடகைதன் உரம் உருவச் சிலை வளைத்தாய்!
கண்டவர்தம் மனம் வழங்கும் கணபுரத்து என் கருமணியே!
எண் திசையும் ஆளுடையாய்! இராகவனே! தாலேலோ!

தாமரைப் பூ பிரமனால் உலகங்கள் படைத்தவனே! தாடகையின் மார்பை ஊடுருவும் அம்பை எய்தவனே! உன்னைப் பார்த்தவர்கள், மனத்தை இசைந்தளிக்கும் திருக்கண்ணபுரத்துக் கண்மணியே! எட்டுத் திசையினரையும் அடிமை கொண்டவனே! இராமனே! தாலேலோ.

75. கொங்கு மலி கருங்குழலாள் கௌசலைதன் குலமதலாய்!
தங்கு பெரும் புகழ்ச்சனகன் திருமருகா! தாசரதீ!
கங்கையிலும் தீர்த்தமரி கணபுரத்து என் கருமணியே!
எங்கள் குலத்து இன்னமுதே! இராகவனே! தாலேலோ!

மணமிகுந்த கருங் கூந்தல் கோசலையின் குலக் கொழுந்தே! பெரும் கீர்த்தி சனகனின் மருமகனே! தயரதன் மகனே! கங்கை கையினும் சிறந்த தீர்த்தமுடைய கண்ணபுரத்து என் கண்மணியே எங்கள் குல அமுதனே! இராகவனே! தாலேலோ.

76. தாமரைமேல் அயனவனைப் படைத்தவனே! தயரதன்தன்
மாமதலாய்! மைதிலிதன் மணவாளா! வண்டினங்கள்
காமரங்கள் இசைபாடும் கணபுரத்து என் கருமணியே!
ஏமருவும் சிலை வலவா! இராகவனே! தாலேலோ!

உந்திக் கமலத்தில் பிரம்மனைப் படைத்தவனே! தசரதன் பெருமகனே! சீதை மணாளனே! வண்டுகள் காமரம் இசையைப் பாடும் கண்ணபுரத்தில் உள்ள என் கருமணியே! அம்புகள் சேர் சாரங்க வில்லை ஆள் பவனே! இராகவனே! தாலேலோ!.

77. பார்ஆளும் படர் செல்வம் பரத நம்பிக்கே அருளி,
ஆராஅன்பு இளையவனோடு அருங்கானம் அடைந்தவனே!
சீர்ஆளும் வரை மார்போ! திருக் கண்ணபுரத்து அரசே!
தார்ஆரும் நீண் முடி என் தாசரதீ! தாலேலோ!

உலகாளும் உரிமையைப் பரதனுக்குப் கொடுத்தருளி அன்பையுடைய இளைபெருமாளோடு, கொடி காட்டுக்குச் சென்றவனே! மலைபோன்ற திருவுடைய மார்பனே! திருக்கண்ணபுர அரசே! மாலையோடு திருமுடியையுடைய தயரதன் மகனே! தாலேலோ.

78. சுற்றம் எல்லாம் பின் தொடரத் தொல் கானம் அடைந்தவனே!
அற்றவர்கட்கு அருமருந்தே! அயோத்தி நகர்க்கு அதிபதியே!
கற்றவர்கள் தாம் வாழும் கணபுரத்து என் கருமணியே!
சிற்றவைதன் சொற் கொண் சீராமா! தாலேலோ!

எல்லா உறவினரும் பின்னே வர காட்டிற்கு ஏகியவனே! ஏதும் அற்றவர்கட்குச் சிறந்த மருந்தானவனே! திருவயோத்திக்கு அரசே! கற்றுணர்ந்தவர் வாழும் கண்ணபுர நீலமணியே! சிறிய தாய் கைகேயியின் சொல்லுக்குக் கீழ்ப்படிந்த இராமனே! தாலேலோ.

79. ஆலின்இலைப் பாலகனாய் அன்று உலகம் உண்டவனே!
வாலியைக் கொன்று அரசு இளைய வானரத்துக்கு அளித்தவனே!
காலின்மணி கரை அலைக்கும் கணபுரத்து என் கருமணியே!
ஆலிநகர்க்கு அதிபதியே! அயோத்திமனே! தாலேலோ!

ஓர் ஆலிலையிலே குழந்தை வடிவாய், உலகுண்ட சகத்ரட்சகா! வாலியை வதம் செய்து தம்பி சுக்ரீவனுக்கு அரசைக் கொடுத்தவா! காற்று, கடல்மணிகளைக் கரைசேர்க்கும் கணபுரத்து என் கருமணியே! திருவாலி நகர்த் தலைவனே! அயோத்தி அரசே தாலேலோ.

80. மலையதனால் அணை கட்டி மதில்-இலங்கை அழித்தவனே!
அலைகடலைக் கடைந்து அமரர்க்குஅமுது அருளிச்செய்தவனே!
கலைவலவர்தாம் வாழும் கணபுரத்து என் கருமணியே!
சிலைவலவா! சேவகனே! சீராமா! தாலேலோ!

மலைகளைக் கொண்டு பாலமிட்டு இலங்கையை அழித்தவனே! திருப்பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமிழ்தைத் தந்தவனே! எல்லாக் கலையிலும் சிறந்தவர்கள் வாழ்கிற கண்ணபுரத்து என் கருமணியே! சாரங்கவில்லில் தேர்ந்தவனே! வீரனே! இராமா! தாலேலோ.

81. தளைஅவிழும் நறுங் குஞ்சித் தயரதன்தன் குல மதலாய்!
வளையஒரு சிலையதனால் மதில்-இலங்கை அழித்தவனே!
களைகழுநீர் மருங்கு அலரும் கணபுரத்து என் கருமணியே!

இளையவர்கட்கு அருள் உடையாய்! இராகவனே! தாலேலோ!

நறுமண முடியையுடைய தசரதன் திருக்குமரனே! வில்லினால் மதில் சூழ்ந்த இலங்கையை அழித்தவனே! செங்கழுநீர்ப்பூ சுற்றிலும் மலரும் திருக்கண்ணபுரத்து என் கருமணியே! தம்பிகளிடம் பேரன்பு கொண்டவனே! இராகவனே! தாலேலோ.

82. தேவரையும் அசுரரையும் திசைகளையும் படைத்தவனே!
யாவரும் வந்து அடிவணங்க அரங்கநகர்த் தயின்றவனே!
காவிரி நல்நிதி பாயும் கணபுரத்து என் கருமணியே!
ஏவரி வெஞ்சிலை வலவா! இராகவனே! தாலேலோ!

தேவர்களை, அசுரர்களைத் திக்குகளைப் படைத்தவனே! எல்லா உயிர்களும் திருவடிகளில் வணங்க அரங்கத்தில் உறங்குபவனே! காவேரி பாயும் கண்ணபுரத்து என் கருமணியே! அன்புடைய கொடியவில்லை ஆள்பவனே! இராகவனே! தாலேலோ.

83. கன்னிநன் மா மதில் புடைசூழ் கணபுரத்து என காகுத்தன்
தன்அடிமேல் தாலேலோ என்று உரைத்த தமிழ்மாலை
கொல்நவிலும் வேல் வலவன் குடைக் குலசேகரன் சொன்ன
பன்னியநூல் பத்தும் வல்லார் பாங்காய பத்தர்களே.

தன் இராமனைக் குழந்தையாக்கிக் கோசலை தாலாட்டிச் சொன்னவற்றை வெண்கொற்றக் குடையுடைய குலசேகரர் தந்த தமிழிலுள்ள பாமாலை பத்தையும் சொல்ல வல்லவர்கள், இராமனுக்குகந்த பத்தர்கள் ஆவர்.

## தசரதன் புலம்பல்

84. வன்தாளின்இணை வணங்கி வளநகரம்
தொழுது ஏத்த மன்னன் ஆவான்
நின்றாயை, அரியணை மேல் இருந்தாயை,
நெடுங் கானம் டரப் போகு
என்றாள்; எம் இராமாவோ! உனைப் பயந்த
கைகேசி தன் சொற் கேட்டு
நன்றாக நானிலத்தை ஆள்வித்தேன்.
நன்மகனே! உன்னை நானே

ஓ! இராமனே! நகரத்து மக்களும் சிற்றரசர்களும் நின் திருவடிகளை வணங்கித் தொழுது மன்னனாக வேண்டி நின்றவனும், அரியணையில்

வீற்றிருந்த உன்னை, 'பெரிய காட்டிற் செல்லுதற்குப் போ' என்று கைகேயி கூறினாலே, என் மகனே! நான், வெகு அழகாக உன்னை இந்நாட்டை ஆளும்படிச் செய்தேனடா!

85. வெவ்வாயேன் வெவ்வுரை கேட்டு இருநிலத்தை
வேண்டாதே விரைந்து வென்றி
மைவாய களிறொழிந்து தேரொழிந்து
மாவொழிந்து வனமே மேவி,
நெய்வாய வேல் நெடுங்கண் நேரிழையும்
இனங்கோவும் பின்பு போக,
எவ்வாறு நடந்தனை? எம் இராமாவோ!
எம்பெருமான்! என் செய்கேனே!

என் இராமனே! கொடிய சொல்லுடைய கடுமொழி கேட்டுப் பெருநிலத்தை ஆள விட்டுவிட்டு, வெகு விரைவில் வெற்றி தர வல்லவையான யானையும் தேரும் குதிரையுமான படைகளையும் விட்டுக், காட்டை அடைந்த, வேல் போன்ற நீண்ட கண்களையுடையளான பிராட்டியும், இளைய பெருமாளும் உடன் தொடர எங்ஙனம் நடந்து சென்றாயோ? ஐயனே! நான் என்ன செய்வேன்!

86. கொல் அணை வேல் வரி நெடுங் கண் கௌசலைதன்
குலமதலாய் குனி வில் ஏந்தும்
மல் அணைந்த வரைத் தோளா! வல் வினையேன்
மனம்உருக்கும் வகையே கற்றாய்!
மெல் அணைமேல் முன் துயின்றாய், இன்னு இனிப்போய்
வின் கான மரத்தின் நீழற்
கல் அணைமேல் கண் துயிலக் கற்றனையோ?
காகுத்தா? கரிய கோவே!

வேல் போன்ற செவ்வரி பரந்த கண்களையுடைய கோசலையின் குலத்தோன்றலே, என் குமரா! வில்லேந்திய மலைத் தோளா! என் மனம் உருக்கச் செய்வ வல்லவனே! கருநிற ஐயனே! மென்மைப் படுக்கையிலே முன் உறங்கின நீ, இன்று முதல் கொடிய காட்டிலுள்ள இலையற்ற மரத்தின் நிழலில் கற்களைப் படுக்கையாகக்கொண்டு கண்

வளர எங்குக் கற்றாயோ?

87. வா, போகு, வா, இன்னம் வந்து ஒருகால் கண்டுபோ,
மலராள் கூந்தல்
வேய்போலும் எழில்-தோளி தன்பொருட்டா
விடையோன்தன் வில்லைச் செற்றாய்!
மா போகு நெடுங் கானம் வல்வினையேன்
மனம் உருக்கும் மகனே! இன்று
நீ போக, என் நெஞ்சம் இரு பிளாவாய்ப்
போகாதே நிற்குமாறே!

இங்கே வா; இனி நீ போ; மீண்டும் வா மறுபடியும் வந்து ஒரு முறை என்னைப் பார்த்து போ. பூக்குழலாள், மூங்கில் தோளுடையாள் சீதையை மணஞ்செய்ய சிவவில்லை முறித்தவனே! தீ வினையேன் மனத்தை உருக்கும் மைந்தனே! யானை கள் அலையும் பெரிய காட்டிற்குப் போக, அது கண்டு என் நெஞ்சு இரண்டாகப் பிளந்து போகாமல் இருக்கின்றதே!

88. பொருந்தார் கை வேல்-நுதிபோல் பரல் பாய,
மெல்லடிகள் குருதி சோர,
விரும்பாத கான் விரும்பி, வெயில் உறைப்ப,
வெம் பசிநோய் கூர, இன்று
பெரும்பாவியேன் மகனே! போகின்றாய்,
கேகயர்கோன் மகளாய்ப் பெற்ற
அரும்பாவி சொற் கேட்ட அருவினையேன்
என் செய்கேன்! அந்தோ யானே,

பகைவர் கையேந்தும், வேல் நுனி போன்ற பருக்கைக் கற்கள் காலில் அழுந்தவும், அதனால் மென்மையான அடிகளில் குருதி பெருகவும், மேலே வெயிலுறைக்கவும், வெவ்விய பசியாகிய நோய் மிகவும் வருத்தம் செய்யவும், எவரும் விரும்பாத காட்டிற்கு மைந்தனே!நான் போகச் சொன்னேன் என்பதனாலே விரும்பிச் செல்கிறாய். கைகேயினுடைய மொழியைக் கேட்ட கொடியேனாகிய நான், ஐயோ! என்ன செய்வேன்!

89. அம்மா! வென்றுகந்தழைக்கும் ஆர்வச் சொல்
கேளாதே அணிசேர் மார்வம்

என் மாவத்திடை யழுந்தத் தழுவாதே
முழுசாதே, மோவா துச்சி
கைம்மாவின் தடையென்ன மென்னடையும்
கமலம் போல் முகமும் காணாது
எம்மானை என் மகனை இழந்திட்ட
இழிதகையேன் இருக்கின்றேனே!

'ஐயா' என்று என்னை மகிழ்வுடன் அழைக்கின்ற அன்பார்வ மொழியைக் கேளாமலும், அணி மார்பை என் மார்பில் அழுந்தும்படி தழுவி மகிழாமலும், உச்சி மோவாமலும், யானையின் நடை ஒத்த அவன் நடை அழகை, தாமரை முகப் பொலிவைக் காணாமலும், என் ஐயன் என் மகன் காடேறப் போக்கி இழந்துவிட்ட இழி செயலைச் செய்தவனான நான் இன்னமும் அழியாமல் உயிர் வாழ்ந்திருக்கின்றேனே.

90. பூ மருவு நறுங்குறிஞ்சி புன்சடையாப்
புனைந்து, பூந் துகில் சேர் அல்குற்
காமர் எழில் விழல் உடுத்து கலன் அணியாது,
அங்கங்கள் அழகு மாறி
ஏமரு தோள் என் புதல்வன் யான் இன்று
செலத்தக்க வனம் தான் சேர்தல்
தூ மறையீர் இது தகவோ? சுமந்திரனே!
வசிட்டனே! சொல்லீர் நீரே.

வேதம் ஓதும் பார்ப்பனர்களே சுமந்திரரே! வசிட்டரே! பூ மணம் நிரம்பிய திருக்குழலைச் சடையாக்கி, அழகிய பட்டணியும் திருவரையில் துறவர்களின் தருப்பப் புல்லை முறுக்கிச் சாத்தி, அணிகள் புனையாது, திருமேனியை வெறுமேனி ஆக்கி, வயது வந்த நான் போக வேண்டிய காட்டிற்கு, நலன்களை நுகர வேண்டிய என் மகன் போனதுதான் அறமோ? பெரியோர்களாக நீங்களே சொல்லுங்கள்!

91. பொன் பெற்றார் எழில் வேதப் புதல்வனையும்
தம்பியையும் பூவை போலும்
மின் பற்றா நுண்மருங்குல் மெல்லியல் என்
மருகியையும் வனத்திற் போக்கி,
நின் பற்றா நின் மகன் மேல்பழி விளைத்திட்டு,
என்னையும் நீள் வானில் போக்க,

என் பெற்றாய்? கைகேசீ!, இரு நிலத்தில்
இனிதாக இருக்கின்றாயே!

கைகேயியே! செல்வத்தைப் பெற்ற வேதங்களை ஓதிய மூத்த மகன் இராமனையும், அவன் தம்பியையும், கொஞ்சும் கிளி, மின் இடையாள், மருமகள் சீதையையும் காட்டுக்குப் போகச்செய்து, உன்னிடம் அன்புள்ள மகன் பரதன்மேல் பழியை உண்டாக்கி என்னையும் மேலுலகத்திற்குப் போம்படி செய்ததால் நீ என்ன பயனடைந்தாய்? இம்மாநிலத்தில் நீ மகிழ்வுடன் வாழ்கின்றாயே, நாணவில்லையா? இவ்வளவும் செய்து விட்டு நீ இப்பெரிய நிலவுலகத்தில் சுகமாக வாழ்கின்றாயே!

92. முன் ஒரு நாள் மழுவாளி சிலைவாங்கி
அவன் தவத்தை முற்றும் செற்றாய்;
உன்னையும் உன் அமைமையயும் உன்மோயின்
வருத்தமும் ஒன்றாகக் கொள்ளாது
என்னையும் என்மெய்யுரையும் மெய்யாகக்
கொண்டுவனம் புக்களந்தாய்!
நின்னையே மகனாகப் பெறப்பெறுவேன்
ஏழ்பிறப்பும் நெடுந்தோள் வேந்தே!

முன் ஒரு நாளில் மழுப்படை பரசுராமனுடைய வில்லை வாங்கி, அவன் தவப்பலம் முழுதும் அழித்தவனே! உன் மேன்மையை, உன்னை மகனாக அடைய நான் அடைந்த துயரை, உன் தாய் கோசலைக்குப் பிரிவினால் ஏற்பட்ட வருத்தத்தை ஒரு பொருட்டாக மதியாது, என்னையும் என் வாக்கையும் உண்மை யென்று கருதிக் காடேகும் அப்பனே! பெருந்தோளனே இனிப் பிறவிகள்தோறும் உன்னையே பிள்ளையாகப் பெறுவேனாவேன்.

93. தேன் நகு மாமலர்க் கூந்தற் கௌசலையும்
சுமித்திரையும் சிந்தை நோவ
கூன் உருவின் கொடுந்தொழுத்தை சொற்கேட்ட
கொடியவள் தன் சொற்கொண்டு, இன்று
கானகமே மிகவிரும்பி நீதுறந்த
வளநகரைத் துறந்து நானும்
வானகமே மிகவிரும்பிப் போகின்றேன்;
மனு-குஷ்த்தார் தங்கள் கோவே!

மனு குலத்திற் சிறந்தவனே! தேன் மலர் சூடிய கோசலையும் சுமத்திரையும் மனம் வருந்த, கூன் உடம்பைப் போல் கோணல் மன வேலைக்காரி மந்தரை எனும் கூனியின் மொழியைக் கேட்ட கொடிய கைகேயியின் மொழியை, மிக மதித்துக் காட்டையே மிக விரும்பி சீர் சிறக்கச் செய்த செவ்விய இந்நகரத்தை விட்டு மேலுலகத்தையே மிக விரும்பி நானும் அவ்இடத்திற்குச் செல்கிறேன்.

94. ஏர் ஆர்ந்த கரு நெடுமால் இராமனாய்
வனம் புக்க அதனுக்கு ஆற்றாத்
தார்ஆர்ந்த தடவரைத் தோள் தயரதன் தான்
புலம்பிய அப் புலம்பல் தன்னை
கூர்ஆர்ந்த வேல் வலவன் கோழியர்கோன்
குடைக் குல சேகரன் சொற் செய்த
சீர் ஆய்ந்த தமிழ்மாலை இவை வல்லார்
தீ நெறிக்கண் செல்லார் தாமே.

அழகு நிறைந்த கருநிறத் திருமால் இராமனகத் தோன்றிக் காட்டுக்குச் சென்ற செயலைப் பொறுக்காமல், பெருந்தோளன் தசரத மன்னன் கதறின கதறலை, உறையூருக்கு அதிபதி, கொற்றக் குடையை உடைய குலசேகராழ்வார் செய்த தமிழ்ப் பாமாலையாகிய பத்துப் பாட்டுகளையும் கற்க வல்லவர்கள், தீய வழிகளில் போகார்.

## தில்லைச் சித்திரகூடம் இராம சரிதம்

95. அங்கண் நெடு மதில் புடை சூழ் அயோத்தி என்னும்
அணி நகரத்து உலகு அனைத்தும் விளக்கும் சோதி
வெங் கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்காய்த் தோன்றி
விண் முழுதும் உயக் கொண்ட வீரன்தன்னைச்
செங்கண் நெடுங் கரு முகிலை இராமன் தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
எங்கள் தனி முதல்வனை எம்பெருமான் தன்னை
என்று கொலோ! கண் குளிரக் காணும் நாளே.

அழகிய மதில் சூழ்ந்த அயோத்தி நகரத்திலே, எல்லா உலகங்களையும் விளங்கச் செய்கிற விளக்காய்ச், செங்கதிர் குலத்திற்கு ஓர் ஒளிபோல் வந்து, வானவர் துன்பம் தீர்ந்து வாழச் செய்த பெரிய வீரனும், சிவந்த கண்களும் காளமேகத்தை ஒத்த வடிவுடைய, தில்லை

நகரிலுள்ள திருச்சித்திரகூடத்தில் இருக்கிற எங்களுடைய தனிமுதலை தலைவனான எம்பெருமானைக் கண்கள் குளிரும்படிக் காண்கின்ற நாள் எந்நாளோ?

96. வந்துஎதிர்ந்த தாடகைதன் உரத்தைக் கீறி
வரு குருதி பொழிதர வன்கணை ஒன்று ஏவி
மந்திரம்கொள் மறை முனிவன் வேள்வி காத்து
வல்லரக்கர் உயிர் உண்ட மைந்தன், காண்மின்:
செந்தளிர்வாய் மலர் நகை சேர் செழுந்தண் சோலைத்
தில்லை நகளர்த் திருச்சித்திர கூடந்தன்னுள்
அந்தணர்கள் ஒரு மூவாயிரவர் ஏத்த
அணிமணி ஆசனத்து இருந்த அம்மான் தானே.

எதிரிட்ட தாடகை மார்பைப் பிளந்து குருதியை வெளியில் சொரியும் அம்பை விட்டும், எல்லா வேதங்களை உணர்ந்த விசுவாமித்ர முனிவரின் யாகத்தைக் காப்பாற்றியும், வலிய அரசர்களுடைய உயிரைக் கொள்ளைகொண்ட மிடுக்கானை, சிவந்த தளிர் நடுவே மலர்களையுடையதும், காண்பவர் மகிழும் அழகு பொருந்திய செழுமையுடைய குளிர் சோலையுடைய தில்லைநகர் திருச்சித்திர கூடத்தில் துதிக்க, அழகிய ஒப்பற்ற மணிகள் பதித்த அரியணையிலே வீற்றிருக்கிறான்; அறியுங்கள்.

97. செவ்வரிநற் கருநெடுங்கண் சீதைக்கு ஆகிச்
சினவிடையோன் சிலையிறுத்து மழுவாள் ஏந்தி
வெவ்வரிநற் சிலைவாங்கி, வென்றி கொண்டு
வேல்வேந்தர் பகை தடிந்த வீரன்தன்னைத்
தெவ்வர் அஞ்சு நெடும்புரிசை உயர்ந்த பாங்கர்த்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
எவ்வரிவெஞ் சிலைத்தடக்கை இராமன் தன்னை
இறைஞ்சுவார் இணையடியே இறைஞ்சினேனே.

செவ்வரி படர்ந்த கருங் கண்ணாள், சீதையை மணம் புரியச், சிவபிரானுடைய வில்லை முரித்து, வரும் வழியில் கோடாலிப் படைஞன் பரசுராமனுடைய வில்லை வளைத்து, அவனை வென்று, வேலைத் தாங்கும் விரோதியைப் போக்கடித்த வீரனாய், உயர்ந்த மதிலையும், ஓங்கிய அட்டாலைகளையுமுடைய தில்லை நகர்த்

திருச்சித்திர கூடத்தில் உள்ள அரிய வில்லை ஏந்திய கைகளையுடைய இராமனைத் துதிக்கும் அடியார்கள், இரு திருவடிகளையும் வணங்கினேன்.

98. தொத்து அலர் பூஞ் சுரிகுழல் - கைகேசி சொல்லால்
தொல் நகரம் துறந்து துறைக் கங்கைதன்னைப்
பத்தி உடைக் குகன் கடத்த வனம் போய்ப் புக்கு
பரதனுக்குப் பாதகமும் அரசும் ஈந்து,
சித்திரகூடத்து இருந்தான் தன்னை இன்று
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
எத்தனையும் கண்குளிர காணப் பெற்ற
இருநிலத்தார்க்கு இமையவர் நேர் ஒவ்வார் தாமே.

கொத்துக் கொத்தாக மலர் சூடிய கூந்தலான கைகேயி சொற்படி, நாட்டை விட்டுக் கங்கைத் துறையின் அன்பையுடைய குகன் தாண்டுவிக்கக் காட்டை அடைந்து, அங்கு வந்த பரதன்க்குத் தன் பாதுகைகளையும் நாட்டையும் கொடுத்துச் சித்திரகூட பருவத்தில் எழுந்தருளி இருந்த இராமனை, இன்று தில்லைநகர்ச் சித்திரகூடத்தில் கண் குளிரக் கண்டுவப்போர்க்கு, விண்ணுலகோர் சிறிதும் இங்கே ஒப்பாகமாட்டார்கள்.

99. வலி வணக்கு வரை நெடுந்தோள் விராதைக் கொன்று
வண் தமிழ் மா முனி கொடுத்த வரி-வில் வாங்கி,
கலை வணக்கு நோக்கு அரக்கி மூக்கை நீக்கி,
கரனோடு தூடணன்தன் உயிரை வாங்கி
சிலை வணக்கி மான் மறிய எய்தான் தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
தலை வணக்கிக் கைகூப்பி எத்தவல்லார்
திரிதலால் தவமுடைத்துத் தரணிதானே.

எதிரி பலத்தைத் தோற்கச் செய்யும் பெரிய மலைத் தோளுடைய விராத அரக்கனைக் கொன்று, வளமான தமிழ் மொழியை ஆக்கிய அகத்தியர் கொடுத்த வில்லை அடைந்து, மான் விழியாள் சூர்ப்பணகையின் மூக்கை அறுத்து, மாயமானாக வந்த மாரீசன் இறந்து போம்படி அம்பை எய்த இராமனைத், தில்லைநகர் திருச்சித்திரகூடத்தில் தலையால் வணங்கிக் கைகள்கூப்பி வாயால் துதிக்க வல்லவர்கள் சஞ்சரிப்பதால் இந்நிலம் பேறு பெற்றதாகும்.

100. மனம் மருவு வைதேகி பிரியல் உற்று,
தளர்வு எய்திச் சடாயுவை வைகுந்தத்து ஏற்றி,
வனம் மருவு கவியரசன் காதல் கொண்டு,
வாலியைக் கொன்று, இலங்கைநகர் அரக்கர்கோமான்
சினம் அடங்க மாருதியாற் சுடுவித்தானைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
இனிது அமர்ந்த அம்மானை இராமன்தன்னை
ஏத்துவார் இணையடியே ஏத்தினேனே.

செல்வமாக விளங்கும் சீதையைப் பிரிந்து, வருத்தமடைந்து, சடாயுவைத் துறக்கத்திற்கு அனுப்பிக், காட்டில் மறைந்து வசிக்கிற குரங்கரசனான சுக்ரீவனுடன் அன்பு பூண்டு வாலியை வதைத்து, இலங்கை இராவணனுடைய செருக்கு ஒழிய, அனுமானைக்கொண்டு எரிப்பித்தவனுமான தில்லை நகர்த் திருச்சித்திரக்கூடம் தன்னுள் இனிமையாய் இருக்கும் இராமனைத் துதிக்கின்றார் திருவடிகளையே துதித்து நின்றேன்.

101. குரை கடலை அடல் அம்பால் மறுக எய்து,
குலை கட்டி மறுகரையை அதனால் ஏறி,
எரி நெடு வேல் அரக்கரொடும் இலங்கை வேந்தன்
இன்னுயிர் கொண்டு, அவன்தம்பிக்கு அரசும் ஈந்து,
திருமகளோடு இனிது அமர்ந்த செல்வன்தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
அரசு-அமர்ந்தான் அடி சூடும் அரசை அல்லால்,
அரசு ஆக எண்ணேன் மற்று அரசு தானே.

அலை கடலை அம்பால் கலக்கும்படி எய்து அணைகட்டி, அவ்வணை வழியே கடலின் மறு கரையை அடைந்து, வேற்படை அரக்கர்களும், இலங்கை இராவணன் முதலாகிய அனைவர் உயிரைக் கொன்று, தம்பியான விபீடணனுக்கு அரசை அளித்துத், திருமகள் சீதையுடன் அமர்ந்துள்ள எல்லாவகைச் செல்வமுடையவனும், தில்லைநகர்த் திருச்சித்திரக்கூடம் தன்னுள் தன் மேன்மை தோன்ற இருக்கும் இராமனது திருவடிகளைத் தலைமேல் தாங்கும் அரசாட்சியை ஒழிய, மாறுபட்ட அரசாட்சியை ஒரு பொருளாக

102. அம் பொன் நெடு மணிமாட அயோத்தி எய்தி,
அரசு எய்தி, அகத்தியன்வாய்த் தான் முன் கொன்றான்

தன் பெருந்தொல் கதை கேட்டு, மிதிலைச் செல்வி
உலகு உய்யத் திரு வயிறு வாய்த்த மக்கள்
செம் பவளத் திரள்வாய்த் தன் சரிதை கேட்டான்:
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
எம்பெருமான் தன்சரிதை செவியால், கண்ணால்,
பருகுவோம்; இன்னமுதம் மதியோம் ஒன்றே.

பொன்மணி மலிந்த மாட மாளிகைகளையுடைய அயோத்திக்கு மீண்டும் அரசாட்சியை அடைந்து, இராவணனுடைய பழைய கதைகளை எல்லாம் அகத்திய முனிவர் சொல்லக்கேட்டு, மைதிலி உலகில் வாழும்படி பெற்ற பிள்ளைகள் தம் வாயினால் தன் வரலாற்றைக் கேட்ட தில்லைநகர்த் திருச்சித்திகூடத்து உள்ள எம் தலைவனின் வரலாற்றைக் காதினாற் கேட்டும், கண்ணால் கண்டும் நுகர்ந்தோம்; நாம் இனிய சாவா மருந்தையும் ஒரு பொருளாக மதிக்கமாட்டோம்.

103. செறி தவச் சம்புகன்தன்னைச் சென்று கொன்று,
செழு மறையோன் உயிர் மீட்டு, தவத்தோன் ஈந்த
நிறை மணிப் பூண் அணியும் கொண்டு, இலவணன்தன்னைத்
தம்பியால் வான் ஏற்றி, முனிவன் வேண்டத்
திறல் விளங்கும் இலக்குமனைப் பிரிந்தான்தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
உறைவானை மறவாத உள்ளந்தன்னை
உடையோம்; மற்று உறுதுயரம் அடையோம் அன்றே.

தவமுடைய சம்புகளை இருக்குமிடம் சென்று தலையறுத்து, வேதிய குமாரனின் உயிரை மீட்டுக் கொடுத்து, மாமுனிவன் கொடுத்த மணிமாலை சாத்தியருளி, இலவணாசுரனை, சத்ருக்கனனைக் கொண்டு துறக்கம் அனுப்பி, முனிவன் சாபத்தினால் இலக்குமணனைத் துறந்தவனும், தில்லைநகர்த் திருச்சித்திரகூடத்து வாழும் இராமனை மறவாத நாங்கள் வருத்தத்தை அடையமாட்டோம்.

104. அன்று சராசாரங்களை வைகுந்தத்து ஏற்றி,,
அடல் அரவப் பகையேறி, அசுரர்தம்மை
வென்று, இலங்கு மணி நெடுந்தோள் நான்கும் தோன்ற
விண் முழுதும் எதிர்வரத் தன் தாமம் மேவி,

சென்று இனிது வீற்றிருந்த அம்மான்தன்னைத்
திலலைநகர்த் திருச்சித்திரக்கூடந் தன்னுள்
என்றும் நின்றான் அவன் இவனென்று ஏத்தி நாளும்
இறைஞ்சுமினோ எப்பொழுதும், தொண்டீர்! நீரே.

உலகில் உள்ள எல்லா உயிர்களையும் விண்ணகம் ஏறச் செய்து, வலிமை உடைய பாம்புகளுக்குப் பகையான கருடன் மீது ஏறிக்கொண்டு அசுரர்களை வென்று, அந்த வீரமகளின் அழகிய நீண்ட தோள்கள் நான்கும் விளங்க, வானோர் அனைவருமே எதிர் கொண்டு வரத், தன் இருப்பிடமான வைகுந்தம் எழுந்து, தன் மேன்மை தோன்ற வீற்றிருந்த எம்பெருமானைத் தில்லை நகர்த் திருச்சித்திரக்கூடத்தில் என்றுமுள்ள இராமன்தான் பெருமான் என்றும் துதித்து வணங்கி உய்வீர்களாக!.

105. தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
திறல் விளங்கு மாருதியோடு அமர்ந்தான்தன்னை
எல்லை இல் சீர்த் தயரதன்தன் மகனாய்த் தோன்றிற்று
அது முதலாத் தன் உலகம் புக்கது ஈறா,
கொல் இயலும் படைத் தானைக் கொற்ற ஒள்வாள்
கோழியர்கோன் குடைக் குலசேகரன் சொற் செய்த
நல் இயல் இன் தமிழ்மாலை பத்தும் வல்லார்
நலந் திகழ் நாரணன் அடிக்கீழ் நண்ணுவாரே.

அதாவது தில்லைநகர் திருச்சித்ரகூடத்தில் அனுமானுடனே வாழும் இராமனைக் குறித்து, அளவில்லாத மங்கல குணங்களையும் வெற்றியையும் அழகையுமுடைய வாளையுமுடையவரும், உறையூருக்கு அதிபதியும், வெண்கொற்றக்குடையை உடைய குலசேகராழ்வார் அருளிச்செய்த இயல் தமிழ்ப் பாமாலை பத்துப்பாட்டுக்களையும் சொல்ல வல்லவர்கள் பகவானுடைய திருவடிகளை அடையப் பெறுவார்கள். குலசேகராழ்வார் திருவடிகளே சரணம். பெருமாள் திருமொழி முற்றிற்று.

## ஆசிரியர்



பெயர் : முனைவர் பி.குருசந்தர்

பெற்றோர் : பச்சமுத்து - சின்னப்பிள்ளை

ஊர் : வடகுமரை - ஆத்தூர்,
சேலம் - 636 121

பிறந்த தேதி : 30-07-1968

ப்பு : B.Sc., B.Lit., M.A., M.Phil., Ph.D.,

ணி : முதுநிலை தமிழ் விரிவுரையாளர்,
சேலம் சௌடேஸ்வரி கல்லூரி, சேல

சிறப்பு : நாட்டு நல திட்டப்பணி அலுவலர்,

இவர் மேற்பார்வையில் இருபது மாணவர்கள்
M.Phil பட்டம் பெற்றுள்ளனர்.

டைப்பு : தமிழ்த் திரைப்படங்களின் அடிக்கருத்து வளர்ச்
ஆய்வு நூல்.

வியூகம் - சிறுகதை தொகுப்பு

திருக்குறள் காட்டும் திருத்தம் - கட்டுரை நூ

வசுமதி என் வான்மதி - புதினம்.

குலசேகர ஆழ்வாரின் திருமால் பக்தி - பக்தி நூ

விருது : "ஆய்வு மாமணி"
சேலம் கே.ஆர்.ஜி. நாகப்பன் இராஜம்மா
அறக்கட்டளை (5.9.2006) வழங்கியது